Registered No. M. 1500.

# நவசக்தி

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

சந்தா விவரம்

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| வருட சந்தா | ... ... | 5 | 0 |
| ஆறுமாத சந்தா | ... ... | 3 | 0 |
| வெளிநாடு-வருட சந்தா | ... | 6 | 0 |

விளம்பர விகிதம்

| | | |
|---|---|---|
| பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூபா | 7 | 0 |
| சில்லரை விளம்பரம் 1 அங். | 0 | 8 |

முன்பணமின்றி விளம்பரஞ் செய்யப்படமாட்டாது.

சிலம்பு எ

நான் கிறிஸ்துவின் உபதேசத்தில் நம்பிக்கை கொண்டுள்ளேன். மாந்தர் அனைவரும் அவ்வுபதேசத்தைக் கடைப்பிடித்து ஒழுகத் தொடங்கும்போதே இவ்வுலகில் நான் க்ஷேமமாய் வாழக்கூடும் என்று நம்புகிறேன். அவ்வுபதேசத்தை நிறைவேற்றுதல் சாத்தியமென்றும், எளிதென்றும், ஆனந்தகரமானதென்றும் நம்புகிறேன்.

* * *

மற்றும் எனது நம்பிக்கையாவது :— அவ்வுபதேசத்தை உலகமெல்லாம் கடைப் பிடிப்பதற்கு முன்னுல், நான் ஒருவனே அதை நிறைவேற்ற வேண்டியவனுயிருந்தாலும், என் வாழ்க்கை பாழாகக் கூடாதெனில் நான் அதை நிறைவேற்றியே தீரவேண்டும். தீப் பற்றி எரியும் வீட்டினுள்ளே இருக்கும் ஒருவன் வெளியில் தப்பிச் செல்ல ஒரு வழி கண்டாயின் மற்றவர் வரினும் வராவிடினும் அவன் உயிர்பிழைக்க விரும்பினுல் அவ்வழியே போய்த் தீரவேவேண்டும் அன்றே ?

* * *

உலகத்தின் போதனைக்கிணங்க நான் இதுகாறும் நடத்தியவாழ்க்கை துன்பகரமானதென்றும், கிறிஸ்துவின் போதனைக் கிணங்க நடத்தப்படும் வாழ்க்கையே இவ்வுலகில் நமது பரமபிதா நமக்கு உத்தேசித்த சுகவாழ்வை நல்க வல்லதென்றும் நான் நம்புகிறேன். கிறிஸ்துவின் போதனை மனிதவர்க்கத்துக்கே ஒரு வரப்பிரசாதமென்றும், அஃது ஒன்றே என்னை அழிவினின்றும் காக்கவல்லதென்றும், இவ்வுலகில் அதுவே பரிபூரண நலத்தை நல்க வல்லதென்றும் நம்புகிறேன். ஆதலின் அப்போதனையை ஏற்றுக்கொள்வதன்றி நான் வேறேதுவும் செய்வதற்கில்லை.

* * *

கிறிஸ்துவின் உபதேசமே க்ஷேமமும் சத்தியமுமாம். முன்னெல்லாம், சத்தியத்தை அறியாதவனுயிருந்த யான், க்ஷேமம் என்றால் இன்னதென்றே தெரியாதவனுயிருந்தேன். தீமையை நன்மையென்றெண்ணித் தீமைக் குழியில் வீழ்ந்திருந்தேன். நன்மைக்கான முயற்சிகளில் நான் ஈடுபட்டிருக்கையிலும் அவற்றைக் குறித்து ஐயுற்றேன். அம்முயற்சிகளே நலத்துக்குரிய முயற்சிகள் என இப்போது அறிந்துகொண்டேன். நன்மையே இறைவனது திருவுளம் ; அதுவே என் வாழ்க்கையின் சாரமுமாம்.

* * *

கிறிஸ்து எனக்குப் போதித்திருப்பதாவது :— நன்மைக்காக உயிர் வாழ் ; ஆனுல் நன்மை போல் தோன்றி உன்னைத் தீமைப் படுகுழியில் வீழ்த்தக் கூடிய மாய வலைகளிடத்து எச்சரிக்கையாயிரு. உன்னுடைய க்ஷேமம் நீ உன் சகோதர மனிதர்களிடம் ஒற்றுமையாயிருப்பதைப் பொ[illegible] றுமைக்கு [illegible] யாகும். [illegible] மையை நீயே பாழாக்கிக் கொள்ளாதே.

* * *

மக்களிடையே ஒற்றுமையானது ஓர் உயரிய இலட்சியமென்றும், அதை அடைய மாந்தர் அனைவரும் முயல வேண்டுமென்றும் முன்னெல்லாம் எனக்குத் தோன்றின. ஆனுல் இது தவறென்றும், ஒற்றுமையும் அன்பும் மக்களுடைய இயற்கை நிலையென்றும், இடையில் தோன்றிய துர்ஆசையும், மோசமும், தவறும் அந்நிலையைப் பாழ்படுத்தினவென்றும் கிறிஸ்து பெருமான் எனக்குக் காட்டியருளினர்.

## எனது நம்பிக்கை

ருஷிய மகான் டர்ல்ஸ்டாய் எழுதியது

கிறிஸ்து எனக்குக் காட்டியது இதுமட்டுமன்று. ஒற்றுமையும், அன்பும், க்ஷேமமும் குடிகொண்ட அந்த இயற்கை நிலையினின்று என்னைக் கவர்ந்து தீமைப் படுகுழியில் வீழ்த்திய மாயப்பொறிகள் யாவை யென்றும் அவர் தமது கட்டளைகளில் தெளிவாக அறிவுறுத்தியிருக்கிறார். அம்மாயப் பொறிகளினின்றும் தப்பித்துக் கொள்ளும் வழியையும் காட்டியிருக்கிறார். எனவே அவருடைய கட்டளைகளிடமும் நான் பூரண நம்பிக்கை கொண்டுள்ளேன்.

* * *

ஆண்டவன் எனக்கு வாழ்க்கை யென்னும் பேற்றை யருளினர். நான் அதைப் பாழ்படுத்திக்கொண்டேன். கிறிஸ்து நாதர் தம்கட்டளைகளில், என் வாழ்க்கை இன்பத்துக்குக் கேடு சூழும் மாயப்பொறிகள் இன்னின்ன என்று அறிவுறுத்தி யுள்ளார். எனவே இனி அப்பொறிகளில் நான் விழமாட்டேன். இதுவே எனது நம்பிக்கையின் சிகரமாகும்.

* * *

வாழ்வு நலத்தைக் குலைக்கும் முதலாவது பொறி என்று கிறிஸ்து எனக்கு அறிவுறுத்தியிருப்பது சகோதர மனிதர்களிடம் கோபம் அதாவது பகைமையாகும். இதை நான் நம்புகிறபடியால், இனிமேல் மனமறிந்து வேறு யாரிடமும் துவேஷங் கொள்ளேன். முன்னெல்லாம் போல் இனி என் கோபத்திலே சந்தோஷமும் பெருமையு மடையவும், அதற்கு நெய் ஊற்றி வளர்க்கவும் என்னுல் முடியாது. என்னை முக்கியமானவனுயும், அறிவுடையவனுயும் மற்றவர்களை அற்பர்களாயும், புத்தியில்லாதவர்களாயும் எண்ணி, என் கோபம் நியாயமானதென்று ஸ்தாபிக்கவும் இனி என்னுலாகாது. கோப உணர்ச்சி தோன்றுவதாய் அறிகுறிகாணப்பட்டதுமே, தவறு என்னுடையதென்று ஒப்புக்கொண்டு, மற்றவர்களிடம் சமரசத்தை நாடாதிருக்கவும் இனி என்னுல் முடியாது.

* * *

கோபம் என்பது இயற்கைக்கு மாருன நிலையென்றும், தீமைபயப்பதென்றும் அறிந்திருப்பது போலவே அக்கோபத்துக்குக் காரணமானநிலைமை யாதென்பதையும் அறிந்திருக்கிறேன். நான் மற்ற ஜனங்களிடமிருந்தது தனியாகி, [illegible] யங்கள் என்றும் கருதுவதே அந்நிலைமை. மற்றவர்களிடம் என்னுடைய பகைமைக்கு முதன்மையான காரணம் இதுவேயென உண[illegible] கிறேன். என்னுடைய பழைய வாழ்க்கை[illegible] நினைவு கூரும்போது, எனக்கு மேலானவர்[illegible] என்று நான் கருதியவர்களிடம் என்னுடை[illegible] துவேஷம்கொழுந்துவிட்டெரிய நான்எப்போ[illegible] இடங்கொடுத்ததில்லை யென்று காண்கி[illegible] அவர்களைநான் எப்போதும்அவமதித்த[illegible]. ஆனுல் எனக்குக் கீழானவன் என்[illegible] கருதிய ஒருவன் எனக்குப் பிடியாத [illegible] காரியத்தைச் செய்தாலும் அவன்மீது எனக்குக் கோபம் கொதித் தெழுந்தது. அவன் என்னைவிட எவ்வளவுக் கெவ்வளவு தாழ்ந்தவன் என எண்ணினேனே அவ்வளவுக் கவ்வளவு அவனை அவமதித்தேன். ஆனுல் இப்போது, எவனெருவன் தன்னைத்தான் தாழ்மைப்படுத்திக் கொள்கிருனே, எவன் எல்லாருக்கும் தொண்டனுயிருக்கிருனே அவனே மேலானவன் என்று உணர்கிறேன். மனிதர்களால் உயர்வாகக் கருதப்படுவது ஆண்டவன் முன்பு இழிவாதல் ஏன் என்பதையும், செல்வர்களும், கீர்த்திமான்களும் இறைவன் முன்பு கடையோர் ஆவதும், ஏழைகளும் தாழ்ந்தவர்களுமே அவன் அருளுக்கு அருகராவதும் ஏன் என்பதையும் இப்போது அறிந்துகொண்டேன்.

* * *

இந்த நம்பிக்கையானது வாழ்க்கையில் நன்மை தீமை, உயர்வு தாழ்வு குறித்த என் எண்ணங்களை அடியோடு மாற்றிவிட்டது. முன்னெல்லாம் எனக்கு நன்மையென்றும், உயர்வென்றும் தோன்றிய கௌரவமும், கீர்த்தியும், கல்வியும், செல்வமும், நாகரிக நடை உடை உணவு முதலியனவும் இப்போது தீமையாகவும் இழிந்தவையாகவும் காணப்படுகின்றன. குடியானவனின் வாழ்க்கையும், வறுமையும், பெயர் புகழின்மையும், எளியநடை உடை உணவுகளும் இப்போது நல்லவையென்றும் உயர்ந்தவையென்றும் எனக்குத் தோன்றுகின்றன. ஆதலின், இவையெல்லாம் அறிந்துள்ள இப்போதும், ஒவ்வொரு சமயம் என்னை நான் மறந்து, என் சகோதர மனிதர் மீது கோபங்கொண்டேனுயின், அடுத்தாற்போல் அமைதி பெறும்போது எனது புன்மையை எண்ணி வருந்துகிறேன். இப்போது என் மனமறிந்து மற்றவர்களைவிட என்னை நான் உயர்வாகக் கருதுவதில்லை. அவ்வாறே, மற்றவர்களினின்றும் என்னைப் பிரித்து அவர்களைவிட என்னை வெளித்தோற்றத்தில் உயர்வாக்கும் எம்முயற்சியிலும் சம்பந்தப்படமாட்டேன். எனக்கும் சரி, பிறருக்கும் சரி, பட்டம், பதவி, அந்தஸ்து இவற்றை நான் ஒப்புக்கொள்ளேன். பெயரையும், புகழையும்தேடேன். மற்றவர்களிடமிருந்து என்னைப் பிரிக்கக் கூடியதான கல்வியறிவையும் விரும்பேன். என்னைப் பிறரிடமிருந்து பிரித்த செல்வத்தினின்றும் விடுதலைபெற முயல்வேன். என் உணவிலும், நடை உடை பாவனைகளிலும். [illegible] றைமைப் படுத்தக் கூடியனவற்றையே தேடு[illegible]

* * *

என் வாழ்க்கையை நாசம் செய்யக்கூடிய ம[illegible]ற்றெரு மாயப்பொறி காமம் என்று கிறிஸ்து பகவான் எனக்குக் காட்டியிருக்கிருர். அதாவது நான் முதன் முதலில் சேர்ந்த பெண்ணையல்லாது மற்றெருத்தியின்மீது ஆசை. கிறிஸ்துவின்இப்போதனையை நான் நம்புகிறபடியால், நான் இதற்குமுன் எண்ணியதுபோல் விபசார நோக்கத்தை மனிதனுடைய இயற்கையென்றே, ஓர் உயரிய குணமென்றே கருதமுடியாது. அழகின் ஆசையையோ, காதலையோ, மனைவியிடம் உள்ள குறைகளையோ காரணமாகச் சொல்லிப் பர ஸ்திரீயிடம் இச்சைப் படுவதை இனி நான் நியாயமென்று கூற முற்படேன். அத்தகைய காமம் என் உள்ளத்தில் எழுந்ததாய்த் தோன்றியதுமே, நான் இயற்கைக்குமாருன, நோய்வாய்ப்பட்ட நிலையையடைந்து விட்டேனென அறிந்து அதினின்றும் விடுபட முயல்வேன்.

* * *

ஒருவனும் ஒருத்தியும் மணம் புரிந்து வாழ்வதே மனிதவர்க்கத்தின் இயற்கை நியதி என இப்போது உணர்ந்துள்ளேன். எவனெருவன் தன் மனைவியை (அதாவதுதான் முதன் முதலில் சேர்ந்த ஸ்திரீயை)ப் புறக்கணிக்கிருனே, அவன் அவளை விபசாரியாக்குவதற்குத் துணை செய்கிருன் என்ற முது மொழியின் பொருளை இப்போது நன்கறிகிறேன். நான் இந் நம்பிக்கை பெற்றிருப்பதினுல், இதற்குமுன், நாகரிக வாழ்க்கை என்றும், கவின்பெறு காதல் என்றும் நான் கருதியவையெல்லாம் இப்போது தீமையாகவும், வெறுக்கத்தக்கனவாகவும் எனக்குத் தோற்றுகின்றன. அதற்குமாறாக உழைப்பும், எளிமையு முள்ள மு[illegible] வாழ்க்கை காமத்தைத் தணிப்பதாகையால் அதுவே நல்வாழ்வென நம்புகிறேன். கலியாணமெனும் வெளிப்படையான, சட்டரீதியான சடங்கை நான் பெரிதாகக் கருதவில்லை. கலியாணச் சடங்குடனே, அஃதில்லாமலோ, ஒரு முறை ஒருவனும் ஒருத்தியும் சேர்ந்துவிட்டார்களாயின் அவர்கள் மீண்டும்பிரிதல் ஆண்டவன் முன்னிலையில் மகாபாதகம் எனக் கருதுகிறேன். இவற்றையெல்லாம் நான் நன்கறிந்துள்ள இப்போதும், ஒவ்வொரு கால் என்னை நான் மறந்து விபசார இச்சைக்கு உள்ளத்தில் இடங்கொடுத்து விட்டேனுயின் முன்போல் அதற்கு நெய்யூற்றி வளர்க்கமாட்டேன். உடனே அதைக் களைந்தெறிய முயல்வேன்.

* * *

என்னிடம் காம இச்சையை அதிகமாய் வளர்த்தது சுகபோகம் நிறைந்த சோம்பேறி வாழ்வே யாதலின் அவ்வாழ்வை இனி நான் விரும்பேன். அக்காமத்துக்கு நெய் ஊற்றி வளர்ப்பனவான நாவல்கள், கவிதைகள், சங்கீதம், நாடகம், களியாட்டம் முதலியவைகளைப் புறக்கணிப்பேன். இவற்றில் நான் சம்பந்தப்பட மாட்டேன். இவற்றின் அபிவிருத்திக்கு எவ்வித உதவியும் செய்யேன். என் மனைவியை நான் கைவிடேன். அவளைக் கைவிடுதல், என்னையும், அவளையும், மற்றவர்களையும் படுகுழியில் வீழ்த்தக் கூடிய முதன்மையான பொறி என்று அறிந்துள்ளேன். விவாகத்துக்குத் தகுந்தவர்கள் விவாகம் செய்துகொள்ளாது தனி வாழ்க்கை நடத்து[illegible] ய்ரேன். வெளிப்படையான சடங்குடன் செய்யப்படும் மணத்துக்கும், சடங்கில்லாமல் மனமொத்துச் செய்யப்படும் மணத்துக்கும் நான் வேற்றுமை பாராட்டேன். ஒருவனும், ஒருத்தியும் தங்கள்வாழ்க்கையில் முதன் முதல் செய்துகொள்ளும் மணம், சடங்குடன் கூடியதாயினும், சடங்கில்லாததாயினும் அதுவே தூய்மை பொருந்திய தென்று நான் நம்புகிறேன்.

* * *

என்வாழ்க்கைக்கு அழிவுதரக் கூடிய மூன்றாவது பொறி பிரமாணம் செய்தல் என்று

# சமய குரவர் நால்வரது பாட்டின் இயல்பு

—(o)—

திருவாளர் - வல்லை. பாலசுப்பிரமணியன் பி. ஏ. எழுதுவது

V

## சுந்தரர்

சுந்தரமூர்த்தி நாயனார் தம் உருவத்தில் மட்டுமன்றி, தமது குணத்திலும், செய்கையிலும், தமது பாடல்களிலும் மிக்க சுந்தரராகவே இருந்தார். சம்பந்தரது பாக்களைப் பயிலுந்தோறும் ஒருவித இறுமாப்பும், உள்ளக்கிளர்ச்சியும், மன உறுதிப்பாடும், அப்பரது பாடல்களைப் பாடுந்தோறும் ஒரு பால் மனநெகிழ்ச்சியும் மற்றொரு பால் மனத்தளர்ச்சியும், மணிவாசகனாரது தேனினு மினிய திருவாசகத்தை உன்னுந்தோறும், உள்ளக்கனிவும், குழைந்த சிந்தையும், அழுத கண்களையு மெய்துகின்ற நாம், யாது காரணத்தின் பொருட்டோ, சுந்தரமூர்த்தி நாயனாரது திருப்பாட்டுக்களை வாய்விட்டுப் பாடுந்தோறும், ஓயாத சிரிப்புக்கு ஆளாகின்றோம். மற்ற மூவர் பாக்களினும், இறைவர்க்கும் தமக்கு முள்ள அன்பின் கெழுதகைமை எத்துணை காணப்படினும், ஒரோவொரு கால் சிறிது அச்சக்குறிப்புந் தோன்றுகின்றது. என்னை? எப்படியென்றாலும் முப்புரத்தையும், காமனையும் எரித்தொழித்த நெருப்பு நெருப்புத்தானே? ஆனால் சுந்தரரோவெனில் தமது பிள்ளைமைத்தனத்தால், தாம் விளையாடுவது ஊழிக்காலத்துப்பெரு நெருப்பென்று அறியாமல் சிறிது தொட்டே பார்ப்பார். அந்தோ! அஃது உண்மையாகவே நெருப்பே யாதலால் சுட்டுவிடும். நோவைத் தரிக்கலாற்றாது நமது சுந்தரர் அழுது சிறு பிள்ளைகள் போன்று, சுட்ட அந்நெருப்பைத் திட்டுவார். அதற்கு அந்நெருப்பு என் செய்யும். தன்னை நியதிமீறி அணுகினோரைத் தன் நியதிப்படி சுட்டுவிட்டது. அதற்கு அதனைத் திட்டினால், அது வாய் வாளாது சிரித்துக் கொண்டிருக்கும். இத்தகைய பிள்ளைமைத்தனத்திற்கும், குறும்புச் செய்கைகட்கும் யாம் நகையாது வேறென் செயமாட்டுவேம்? தாம் இன்னதுதான் செய்யலாம், இன்னது செய்தல் கூடாது; தம்மை வலிந்து ஆட்கொண்ட இறைவரை இன்னதுதான் வாய் கூசாமற்கேட்கலாம்; இன்னது கேட்கக்கூடாது என்பதே நம் சுந்தரர்க்குக் கிடையாது. தாம் நினைத்த செய்கைகளையும், தாம் கேட்க வேண்டிய பொருளையும், தாராளமாய் நிகழ்த்தலும், கேட்டலும் செய்வார். இறைவரும் இவர் செய்தனவற்றைப் பொறுத்துக் கொண்டும், கேட்டனவற்றை யளித்துக்கொண்டு மிருத்தல்வேண்டும். வேறென் செய்வது? இதுதான் போலும் வேண்டாமென்று பிடிவாதஞ் செய்தாரை வலிந்து தடுத்தாட் கொண்டதன் பயன். இத்தகைய நிகழ்ச்சிகளை யாம் இவரது பதினெட்டியாண்டு வாழ்க்கையில் காணக் கிடக்கின்றமையால், இவையிற்றினையே நம்மாராய்ச்சிக்குப் பொருளாகக் கொண்டு மேற் செல்வாம்.

சுந்தரமூர்த்தி நாயனார் இறைவனை வழிபட்ட நெறி சகமார்க்கமெனப்படும். அஃதாவது, சுந்தரர் இறைவரைத் தமது உணர்ச்சியொத்த, ஒருமைபூற்ற நட்பினராய்ப் பாராட்டி வந்தார். இவ்வொரு கருத்தினை மட்டும் நம்முள்ளங்களிற் கிடத்துவோமானால், சுந்தரரது பாக்களில் முன்னுக்குப் பின் முரணாக வொன்றுமில்லை யென்பது விளங்கும். இதன் பொருட்டே இவர்க்குத் "தம்பிரான் றோழர்" என வழங்குதலுங் காண்க. இறைவர் மாட்டு, மற்றியாவர்க்கு மில்லாத உரிமை தமக்கொருவர்க்கு மட்டும் உண்டென்று நினைத்தார். இவரது முற்பிறப்பிலேயே, திருக்கயிலாயத்தில் ஆலால சுந்தரராயிருக்கும் போது சும்மாவிராமல், உமாதேவியாரின் பூக்கொய்யும் சேடியர்களான அனிந்திதை, கமலினி என்னும் இருவர் மாட்டும் மட்டடங்கா மோகங்கொண்டார். அம்மூவரின் உள்ளக் கிடைகளை யறிந்த எம்மிறைவர், வேண்டுவார் வேண்டியதே ஈவாராகையினால், அவர் தம் வேட்கையை நிரப்புவான் வேண்டி, ஆலால சுந்தரரைத் திருமுனைப்பாடி நாட்டில், திருவாரூரில் சடையனாரென்னும் ஆதி சைவருக்கு மைந்தராய்ப் பிறக்கும்படியும், கமலினியார் திருவாரூரில், பரவையார் என்னுந்திருநாமத்தோடு உருத்திர கணிகையாய்ப்பிறக்கும்படியும், அனிந்திதையார், திருவொற்றியூரையடுத்த ஞாயிறு என்னும் கிராமத்தில் வேளாளர் குலத்தில் ஞாயிறு கிழாருக்குச் சங்கிலி நாச்சியாரென்னும் பெயருடன் மகளாகப் பிறந்து வளர்ந்து தக்க பருவம் வந்த பிறகு திருவொற்றியூரை யடைந்து ஆலயத்தில் திருத்தொண்டு செய்யும்படிக்கும் நியமித்தார்.

முன்பு வாக்களித்தபடியே, சுந்தரர்க்குத் திருமண முடியுந் தருணத்தில் இறைவர் மறையவர் கோலத்தோடு வந்து தடுத்து, பலவகை மொழிகளாலும் பொறுத்து, வலிதின் ஆட்கொண்டார். போதாதே தன்று, * "பித்தா" என்று பாடவும் பெற்று மகிழ்ச்சி யடைந்தார். இதுவும் ஒரு மகிழ்ச்சி போலும். ஒருவர் கூட்டியை யரிந்தும், ஒருவர் மைந்தனைக் கொன்றும், ஒருவர் தலையினைக் கல்லில் மோதியும், ஒருவர் கண்ணைப் பிடுங்கியும் தம்மை அணுக அஞ்சி நடுநடுங்கி நாக்குழறப்பாடி அழுவதையும் பாராட்டாது அவர்கட்கு, மழையைப் பெய்வித்தும், வறுமையைத் தந்தும், ஆய இவைபோன்ற இன்னல்களை இழைத்த இறைவர், தம்மை வசை பாடவும், திட்டவும், செய்யத் தகாத செயல்களைச் செய்தற்கு ஏவவும் ஓர் அடியாரை வலிந்து ஆட்கொண்டனர் போலும். எனில், சுந்தரர் தமக்கு நேரிட்ட நல் வாழ்வைக் கண்டு மகிழ்வெய்தி, அதனைத் தமக்குத் தந்த இறைவரைப் பித்தரென்று விளித்ததில் யாது தடையுளது. இவரல்லரோ பெரும் பித்தர்! இதன் பொருட்டே இவர் தமக்கு வன்றொண்டர் என்ற பெயரும் வழங்குகின்றது.

இனி, முன்பு தாம்செய்த பழவினையின் பயன் நியதி தத்துவத்தின்படி, பையப் பைய முடியுந் தருணம் உற்றதனால், நம் சுந்தரரும் மாதர்மேல் மனங்கொண்டார். தாம் முன்பு ஒரு மண முடிக்குந் தறுவாயில், இறைவர் கிழப் பிராமணராக வந்து தடுத்து, மணத்தையுஞ் சிதைத்த பெருங் குற்றத்திற்காக, அவரைக் கொண்டே இரண்டு மணங்களைத் தாம் நிறைவேற்றிக் கொள்ளக் காப்புக் கட்டிக்கொண்டனர். நன்றே! சுந்தரரின் சமர்த்து. இவர் இறைவர் முன்பு அறுதியிட்ட வண்ணம் திருவாரூரில் தியாகராசப் பெருமானுக்கு நாடோறும் வழிபாடாற்றிக்கொண் டிருக்கையில் ஒருநாள் வினை வசத்தால் ஆண்டுத் திருக்கோயிலில் திருத்தொண்டு செய்துவரும் பரவையார், மயிலென ஒல்கி, பொற் பூங்கொடிபோல் ஒசிந்து, அன்னத்திற்கு நடை கற்பிப்பது போல் தம் சேடியர்புடைசூழ, ஒரு மடப்பிடியானை போல் தம்முன் இறைவர் வழிபாட்டிற்கு வருதலைக் கண்டார். இவ்விருவரும் தம்மை யொருவருக் கொருவர் கண்டு விட்டதும் எல்லாம் முடிந்து விட்டது. பழவினையும் முடிந்து விட்டது. என்னை?

"கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கில் [வாய்ச்சொற்கள்
என்ன பயனு மில"

என்னும் திருவள்ளுவனாரின் திருவாக்கு மெய்ம்மை யாகலா னென்க.

பரவையார் சென்றுவிட்ட பிறகு அவரழகினைப் பார்த்து,

"கற்பகத்தின் பூங்கொம்போ
காமன்றன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின்
புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர்
மதிபூத்தவிரைக் கொடியோ
அற்புதமோ சிவனருளோ
அறியேனென் றதிசயித்தார்"

பரவையாரும் சுந்தரரைக்கண்டு தெய்விகக் காதல் வலிந்தெழுப்ப,

"முன்னேவந் தெதிர்தோன்றும்
முருகனோ பெருகொளியால்
தன்னேரில் மாரனோ
தார்மார்பின் விஞ்சையனோ
மின்னேர்செஞ் சடைஅண்ணல்
மெய்யருள்பெற் றுடையவனோ
என்னேஎன் மனந்திரித்த
இவன்யாரோ எனநினைந்தார்"

தாம் நினைத்தவாறே இவ்விருவர்க்கும் மணமும் நிறைவேறியது. சுந்தரமூர்த்தி நாயனாரைப்பற்றி நினைக்குந்தோறும், நவில்தொறும் நயங் காண்டலும், பயில்தொறும் இன்பம் பயத்தலுமாகிய சேக்கிழாரது பெரிய புராணமென்னும் சார்பு நூலுக்கும் நம்பியாண்டார் நம்பிகளது திருத்தொண்டர் திருவந்தாதி என்னும் வழி நூலுக்கும், முதனூலாகிய திருத்தொண்டத் தொகைக்கு ஆசிரியர் நம் சுந்தரர் என்று உறுதியாகக் கடைப்பிடித்தல் வேண்டும். இனி, இத் திருத்தொண்டத் தொகையும் விளையாட்டாய் நிகழ்ந்த ஒரு வினையின் பெரும் பயனென்று பெரிய புராணம் படிப்பவர்கட்குப் புலனாகும். "திருவாரூரில் தேவாசிரிய மண்டபத்திலிருக்கும் சிவனடியார்களுக்கு நானடியே னாகும்படி புத்திடங் கொண்டார் எப்போ தருள் செய்வாரோ"வென்றெண்ணிய எண்ணம் வெளிக்குத் தோன்றாமல், இவர் சிவனடியாரை வணங்காது செல்லுதலினால், ஆண்டிருந்த விறன்மிண்ட நாயனார் வெகுண்டு, "திருக்கூட்டத்திற்குப் புறம்பு, இவர்க்கும் பிரானாகிய பரமசிவனுக்கும் புறம்பே" என்று சொல்ல, சுந்தரர் அதனைக்கேட்டு அஞ்சி, திருத்தொண்டத் தொகை பாடினார்.

இனித் தாம் வேண்டுவனவற்றை அஞ்சாமற்கேட்க வாரம்பிக்கிறார். "சுந்தரன் பெண்ணையும், பொன்னையும் பாடினன்" என்பது இவர்க்குத் தகுந்ததாகவே யிருக்கின்றது. இதற்கு அடிப்படையாக முதலிலேயே, தமக்கும், தமது இருமனைவிமார்க்கும், தம்மை யாட்கொண்ட முதல்வனே துணை யென்றும், தமக்கு வேண்டிய பொருளெல்லாவற்றினையும் அவரே தமக்கு அருளல் வேண்டுமென்றும் பொருள்பட,

"பண்மயத்த மொழிப்பரவை சங்கிலிக்கும் எனக்கும் பற்றாய பெருமானே மற்றாரை யுடையேன், உண்மயத்த வுமக்கடியேன் குறை தீர்க்கவேண்டும் ஒளிமுத்தம் பூணாரம் ஒண்பட்டும் பூவும், கண்மயத்த கத்தூரி கமழசாந்தும் வேண்டும் கடனாகைக் காரோண மேவியிருந்தீர்"

என்றும்,

"பத்தூர்புக் கிரந்துண்டு பலபதிகம் பாடிப் பாவையரைக் கிறிபேசிப் படிறாடித் திரிவீர், செத்தார்தம் எலும்பணிந்து சேவேறித் திரிவீர் செல்வத்தை மறைத்துவைத்தீர் எமக்கொருநா ளிரங்கீர், முத்தார மிலங்கு மிளிர் மணிவயிரக்கோவை யவைபூணத் தந்தருளி மெய்க்கினிதா நாறும், கத்தூரி கமழ் சாந்தும் பணித்தருள வேண்டும் கடனாகைக் காரோண மேவியிருந் தீரே"

என்றும், திருநாகைக் காரோணத் தேவாரங்களிற் பாடியிருக்கின்றார்.

"செத்தார்தம் எலும் பணிந்து
சேவேறித் திரிவீர்
செல்வத்தை மறைத்து வைத்தீர்
எமக்கொரு நாளிரங்கீர்"

என்னுமடிகளைப் படிக்கும்போது எவர் தாம் நகையாமலிரார்? இதனை நினைக்கும்போது, இங்கிலாந்து நாட்டில், ஏழாவது ஹென்றி (Henry VII) மன்னர் காலத்தில், அவர் தம் பொக்கிஷத்தை நிரப்புமாறு, குடிகளிடம் இறை வாங்குதற்கு, அவர் தம் மந்திரிகள், டட்லி (Edmund Dudley) எம்சன் (Richard Empson) என்பாரின் சூழ்ச்சிகள் எம் உள்ளங்களிற் றோன்றுகின்றன. ஆடம்பரத்தோடும், வெளிப்பகட்டோடும் ஒருவன் இருந்தால், அவனைப் பார்த்து, "இவ்வளவு ஆடம்பரத்துடனிருக்க உன்னிடம் எவ்வளவோ செல்வமிருத்தல் வேண்டும். ஆதலால், உன் செல்வத்தின் ஒரு பகுதியை அரசர்க்குப் பகிர்ந்துகொடு" என்பார்கள். மற்றொருவன் வறியனாகக் காணப்பட்டால் அவனை நோக்கி, "நீ, உன் அழிவற்ற செல்வத்தினை எங்கேயோ மறைத்து விட்டு இவ்வாறு திரிகின்றாய். நீ மிகவும் எளியனாய்த் தோன்றுகிறபடியால் அதிகம் பணம் சேர்த்து வைத்திருத்தல் வேண்டும். ஆதலால் நீயும் அரசர்க்கு இறை தருதல்வேண்டும்" என்பார்கள். இவர்களுடைய விதண்டாவாதம் போலிருக்கின்றது சுந்தரர் இறைவரைப் பார்த்துப் பொன் கேட்பது. இதனோடும் விட்டாரில்லை.

"பண்மயத்த மொழிப்பரவை
சங்கிலிக்கும் எனக்கும்
பற்றாய பெருமானே
மற்றாரை யுடையேன்"

என்று அவர் முன்பு கூறிய வண்ணமே, ஈண்டும் திருக்கோளிலிக்குச் சென்று குண்டையூர்க்கிழார் கொடுத்த நெல்லைப் பரவையார் திருமாளிகையிற் சேர்க்கும்படி திருப்பதிகம் பாடினார்.

இப்பதிகத்திலும், நம் சுந்தரர், தம்மனைவியாராகிய பரவையார் பசியோடும் வருந்துவார்; அவர் தம்வருத்தம் தம்மால் பொறுக்க முடியாது; ஆதலால் நெல்லினை யவர்பாற் சேர்க்கவேண்டும் எனப்பொருள்பட

"நீளநினைந் தடியேன் உமைநித்தலுங்
கை தொழுவேன்
வாளன கண்மடவாள் அவள்
வாடி வருந்தாமே
கோளிலியெம் பெருமான் குண்டை
யூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
ஆளிலை யெம்பெருமான் அவை
அட்டித் தரப்பணியே"

என்று எவ்வளவு அஞ்சாமல் பாடுந்திறத்தை எம் அன்பர்களே, நீவிரே வியந்து கொள்ளுங்கள். இவரைப்போன்று இவ்வளவு அண்மையில் நெருங்கித் துணிவுபெறப் பாடியவர் இதுகாறும் யாங்கண்டிலம். இது மட்டுமோ? நெல்லினை யனுப்பாவிட்டால் பரவையார் தம்மேல் வெகுண்டு கோபிப்பாரென்றும், அதனைத் தாம் பொறுக்க முடியாதென்றும், இத்தகைய பெண்களின் தன்மை, சடையி லொருத்தியும், வாமபாகத்திலொருத்தியுமாக வைத்திருக்கும் இறைவரும் அறியாததொன்றன்று என்று அவர் தலைக்கே உலை வைக்கிறார்.

"பாதியோர் பெண்ணை வைத்தாய்
படருஞ்சடை கங்கைவைத்தாய்
மாதர் நல்லார் வருத்தம்
அதுநீயு மறிதியன்றே"

"பரவை பசிவருத்தம் அதுநீயு
[மறிதியன்றே"

என்னும் இவ்வடிகளால் இவ்வுண்மையினை யறிக.

(தொடரும்)

* சிலேடை. சோதிவுருவன் என்பது பொருள்

---

கிறிஸ்து எனக்குக் காட்டியிருக்கிறார். இதனை நான்நம்புகிறேன். ஆதலின் முன்செய்ததுபோல் எவருக்கும், எதைப் பற்றியும் நான் பிரமாணம் செய்து கொடேன். பிரமாணம் செய்வதனால் எவருக்கும் தீங்கில்லையென்றும், எல்லாரும் செய்கிறார்களென்றும், அரசாங்க நடைமுறைக்கு அஃது அவசியமென்றும், அதை மறுத்தால் எனக்கும் பிறருக்கும் கஷ்டமென்றும் இனி என்னால் சாக்குச்சொல்ல முடியாது. பிரமாணம்செய்தல் எனக்கும்பிறருக்கும் தீமை பயப்பதென்று அறிந்துள்ளேன். ஆதலின் அதை என்னால் செய்யமுடியாது.

* * *

வேறுமனிதன் ஒருவனோ, சிலரோ இடும் சட்டங்களைச் செய்வதாக ஜனங்கள் முன்னாடியே பிரமாணம் செய்து கொடுப்பது மோசமாகும். ஏனெனில், மனிதன் கடவுளைத்தவிர வேறெவருக்கும் கீழ்ப்படிதல் கூடாது. யுத்தம், சிறையிடுதல், மரணதண்டனை, சித்திரவதை முதலியவையே உலகில் மிகக் கொடிய தீமைகள் என்பதை நான் இப்போது அறிந்திருக்கிறேன். பிறருடைய சட்டங்களுக்குக் கீழ்ப்படிவதாகப் பிரமாணம் செய்யும் வழக்கமே இத்தீமைகளுக் கெல்லாம் காரணமாகும். ஏனெனில் இத்தீமைகளைச் செய்வோர் அவற்றின் பொறுப்பு தங்களுடையதன்று எனக் கருத முடிகிறது. எனவே, முன்னாடியே கொடுக்கப்படும் ஒவ்வொரு வாக்குறுதியும் தீமையென்று நான் கருதுகிறேன். இவ்வாறறிந்த பின்னர், வாழ்க்கையில் உயர்வு, இழிவு குறித்த என் எண்ணங்களும் மாறிவிட்டன. அரசாங்கத்தினிடம் விசுவாசம், அதை உறுதிப்படுத்துவதற்காகப் பிரமாணம் செய்தல், பிறரிடம் கட்டாயப்படுத்தி விசுவாசப் பிரமாணங்கள் வாங்குதல், அத்தகைய பிரமாணங்களின் கீழ் மனச்சான்றுக்கு விரோதமான வினைகளை நிகழ்த்துதல் இவையெல்லாம் உயரியவை, நல்லவை என்று முன்னம் எனக்குத் தோன்றிற்று. இப்போதோ அவையெல்லாம் தீயன என்றும் இழிந்தவை என்றும் தோன்றுகின்றன. ஆதலின் இனி நான், "பிரமாணம் செய்யாதே" என்னும் கிறிஸ்துவின் கட்டளையை மீறி நடக்க முடியாது. யாருக்கும் நான் பிரமாணம் செய்து கொடேன்; பிரமாணம் செய்யும்படி பிறரைக் கட்டாயப்படுத்தேன்; பிறர் பிரமாணம் செய்வதிலோ, பிரமாணம் செய்யும்படி பிறரைக் கட்டாயப்படுவதிலோ நான் சம்பந்தப்படேன்; பிரமாணம் செய்தல் நல்லதென்றாவது, அவசியமென்றாவது, பலர் கருதுவது போல் தீமையற்றதென்றாவது எண்ணவும் மாட்டேன்.

(அடுத்த பரலில் முடிவுபெறும்)

---



# பரதகண்டத்தின் நிலை

## பிரபல அமெரிக்கர்களின் அபிப்பிராயங்கள்

மிஸ் மேயோ என்னும் அமெரிக்கப் பெண்மணி "இந்தியத்தாய்" என்ற பெயருடன் எழுதி வெளியிட்ட அவதூறுக் களஞ்சியத்தைப் பற்றி நாடெங்கும் கிளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. ஆனால் மிஸ் மேயோவுக்கு முன்னர் இந்தியாவின்மீது கவனம் செலுத்திய பிரபல அமெரிக்கர் பலர் மிஸ் மேயோவின் கருத்துக்கு முற்றும் மாறான அபிப்பிராயம் தெரிவித்திருக்கின்றனர். அவர்களில் இந்திய நாகரிகத்தின் சிறப்பைக் குறித்தும், இந்தியா பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் அடைந்திருக்கும் இழி நிலையைக்குறித்தும், இந்தியாவுக்குச் சுதந்திரம் அளிக்க வேண்டிய அவசியத்தைக் குறித்தும் எழுதியவர்கள் உண்டு. இத்தகையோர் சிலருடைய அபிப்பிராயங்களைத் தொகுத்து இம்மாதத்து "மாடர்ன் ரிவியூ"வில் ஜே. டி. சண்டர்லண்டு துரை மகனார் ஒரு கட்டுரை வெளியிட்டிருக்கிறார். அக்கட்டுரையின் முற்பகுதியில், பிரபல அமெரிக்கர்கள் உலகத்துக்கே பொதுவாக வெளியிட்ட சுதந்திர தத்துவங்களையும், பிற்பகுதியில் இந்தியாவைக்குறிப்பிட்டு வெளியிடப்பட்ட அபிப்பிராயங்களையும் தந்திருக்கிறார். அவற்றுள் முற்பகுதியிலிருந்து அமெரிக்கக் குடியரசின் பெயர் பெற்ற அக்கிராசனர்களில் ஒருவரான ஆபிரகாம் லிங்கனின் கருத்துகளையும், பிற்பகுதியிலிருந்து மற்றும் சிலருடைய அபிப்பிராயங்களையும் இங்கே மொழி பெயர்த்துத் தருகிறோம்.

### ஆபிரகாம் லிங்கன்

அமெரிக்காவிலும் சரி, பிறநாடுகளிலும் சரி ஆபிரகாம் லிங்கனுடைய வார்த்தைகளுக்கு அளிக்கப்படும் மதிப்பைப் போல் வேறெந்த அமெரிக்கரின் வார்த்தைக்கும் அளிக்கப் படுவதில்லை. அவர் உலகத்துக்கே பொதுவாக வெளியிட்ட சுதந்திர தத்துவங்களில் சில வருமாறு:—

"ஒரு மனிதன் எவ்வளவு நல்லவனாயினும் வேறொரு மனிதனை ஆளத் தகுதியுடையவனாகான்; ஒரு தேசம் எவ்வளவு நல்லதாயினும் வேறொரு தேசத்தை ஆளத் தகுதியுடையதாகாது. ஒரு மனிதனோ, ஒரு தேசமோ தன்னைத் தான் ஆண்டு கொண்டால் அது சுதந்திரமாகும்; பிற மனிதனையோ, பிற தேசத்தையோ ஆண்டால் அது கொடுங்கோன்மையாகும். ஒரு தேசம் மற்றொரு தேசத்தின் சுதந்திரத்தைப் பறிக்குமானால், அது தானும் சுதந்திரப் பேற்றுக்குத் தகுதியில்லாததாகிறது. ஆண்டவன் நீதி தவறுதவரான படியால் நீண்ட காலம் அது சுதந்திரத்துடன் வாழாது."

"உலகில் எல்லாக் காலங்களிலும் கொடுங்கோலர்கள் பிற ஜனங்களை வென்று அடிமைப்படுத்திய போதெல்லாம் அந்த ஜனங்களின் நன்மைக்காகவே அப்படிச் செய்வதாகச் சொல்வது வழக்கம். இச்சமாதானம் ஓர் அரசரின் வாயினின்று வந்தாலும், ஒரு தேசத்தாரை ஆளும் மற்றொரு தேசமக்களின் வாயிலிருந்து வந்தாலும் ஒன்றே தான். பிறமக்களின் தோள் மீதேறித் தாங்கள் சவாரிசெய்வது தாங்கள் அதை விரும்புவதினால் அல்லவென்றும், அப்படிச் செய்வதால் அம்மக்கள் அதிக நலம் பெறுவதை உத்தேசித்தே யென்றும் அவர்கள் எல்லாரும் சொல்கிறார்கள். நீ வேலை செய்; நான் சாப்பிடுகிறேன். நீ உழை; உன் உழைப்பின் பயனை நான் அனுபவிக்கிறேன். வாதம் ஒன்று தான்; தளமும் ஒன்றுதான்."

"எந்த விடத்திலுள்ள எந்த ஜனங்களுக்கும், அவர்களுக்கு விருப்பமும் சக்தியுமிருந்தால், அவர்கள் அநீதமான கொடுங்கோல் ஆட்சிமுறை என்று கருதும் ஆட்சிமுறையை எதிர்த்து வீழ்த்தி அவர்களுக்குத் தகுதியான புதிய ஆட்சியை அமைத்துக் கொள்ள உரிமையுண்டு. இது மக்களின் ஓர் அரிய, பரிசுத்தமான உரிமையாகும். இவ்வுரிமையே உலகத்துக்கு விடுதலையளிக்குமென்று நாம் நம்புகிறோம்."

### வில்லியம் டி. ஹாரிஸ்

இனி, இந்தியாவைக் குறிப்பிட்டுப் பிரபல அமெரிக்கர் கூறியுள்ள அபிப்பிராயங்களுக்கு வருவோம். அமெரிக்க ஐக்ய இராஜ்யத்தின் கல்வி இலாகா கமிஷனராயிருந்த டாக்டர் வில்லியம் டி. ஹாரிஸ் 1908-ம் ஆண்டில் தேசீயக்கல்வி மகாசபையில் கூறியதாவது:-

"இந்தியாவில் இங்கிலாந்தின் கல்வி முறையானது நாகரிகத்துக்கே ஓர் இழுக்காகும். அவ்விஷயத்தை நான் நன்கு ஆராய்ச்சி செய்துள்ளேன். பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், பரோபகார சீலரானவில்பர்போர்ஸ்என்னும் ஆங்கிலேயர் இந்தியாவுக்கு உபாத்தியாயர்களை அனுப்பி வைக்க உத்தேசித்தார். ஆனால் கிழக்கிந்தியக் கம்பெனியின் டைரக்டர் ஒருவர் அதை ஆட்சேபித்துக் கூறியதாவது:— 'அமெரிக்காவில் பள்ளிக்கூடங்களும் கலாசாலைகளும் ஏற்படுத்த அனுமதி தந்த தவறினால் இப்போதுதான் அமெரிக்காவை இழந்தோம். அதே தவறை இந்தியா விஷயத்திலும்செய்ய நமக்குக்கட்டிவராது.' பிரிட்டிஷ் இந்தியாவில் இலவச பொதுப்பள்ளிக்கூடங்கள் இல்லை. கட்டாய ஆரம்பக்கல்வி கூடக் கிடையாது. இந்திய இளைஞர்கள் கல்வித் தாகங் கொண்டிருக்கிறார்கள். பண்டை ஞானச்செல்வத்திலும், அதிஆச்சரியமான தத்துவக்கலைகளிலும் சிறந்ததான அப்பெரிய நாட்டில் கல்வியைப் பரப்ப உதவி செய்தல் இங்கிலாந்தின் கடமையாகும்."

### சார்லஸ் கத்பர்ட் ஹால்

நியூயார்க் சமயநூல் ஆராய்ச்சிக் கழகத்தின் அக்கிராசனரான டாக்டர் ஹால் இந்தியாவில் இரண்டாம் முறை சுற்றுப் பிரயாணம் செய்துவிட்டுவந்து 1908ல் நியூயார்க் வக்கீல் சங்கத்தில் நிகழ்த்திய உபந்நியாசத்தில் கூறியதாவது:—

"இங்கிலாந்தானது இந்தியாவை இங்கிலாந்தின் நன்மையை முன்னிட்டு ஆள்கிறதேயன்றி இந்தியாவின் நன்மைக்காகவன்று என்பதை மறுப்பதற்கில்லை. இதைக்கூற எனக்குக் கஷ்டமாகவே இருக்கிறது. ஏனெனில் இந்தியாவுக்குப் போகும்வரை என்னுடைய அநுதாபங்கள் எல்லாம் இங்கிலாந்தின் சார்பாகவே இருந்தன. நான் இளமையில் கல்வி பயின்றது இங்கிலாந்தில். அந்நாட்டில் என் அருமை நண்பர்கள் பலர் இருக்கின்றனர். எனினும், உண்மையைக் கூறியாக வேண்டுமாதலின் இதைக் கூறுகிறேன்.

"மிஸ்டர் மார்லி (இந்திய மந்திரி) செய்த ஒரு பிரசங்கத்தில் 'இந்தியாவின் பஞ்சத்துக்கு என்மீது குற்றஞ் சாட்டப்படமாட்டாதென நம்புகிறேன். கார்மேல் மலையில் எலிஜா செய்த காரியத்தை நான் செய்ய வேண்டுமென இந்தியர்கள்கூட எதிர்பார்க்க மாட்டார்கள்' என்று சொன்னார். அதாவது இந்தியாவின் பஞ்சங்களுக்கு மழையின்மை ஒன்றே காரணமென்று அவர் இதன் மூலம் குறிப்பிடுகிறார். இஃது உண்மையன்று. இந்தியாவில் விளையும் உணவுப் பொருள்கள் எல்லாம் விளைந்த இடங்களிலேயே இருக்குமாயின், எந்த வருஷத்திலும் எந்தக் காலத்திலும் உணவுப் பஞ்சம் ஏற்பட முடியாது....பாரபட்சமான வரி விதிதங்களால் இந்தியாவின் சுதேசிக் கைத்தொழில்கள் எல்லாம் அழிந்துபட்டன. எனவே ஜனத்தொகையில் 100-க்கு 85 பேர் நிலத்தையே நம்பி உயிர்வாழவேண்டியவர்களாயிருக்கிறார்கள். இவர்கள் தங்கள் நிலத்தையும், பயிரையும் லேவாதேவிக்காரர்களுக்கு அடமானம் வைக்கவேண்டியவர் களாகிறார்கள்....இந்தியாவில் தானியம் ஏராளமாய் இருக்கிறது. பின்னர் கஷ்ட மென்னவென்றால், ஜனங்கள் அதை வாங்க முடியாவண்ணம் ஏழைகளாயிருக்கிறார்கள். பஞ்சம் நிரந்தரமாய்க் குடிகொண்டு விட்டது. ஆயினும் கப்பல் கப்பலாய் உணவுப் பொருள்களும், கோடிக் கணக்கான பணமும் வருஷந்தோறும் நாட்டை விட்டுப் போய்க்கொண்டுதானிருக்கின்றன."

### ஹென்ரி ஜார்ஜ்

அவருடைய புத்தகம் ஒன்றில் கூறுவதாவது :—

"இந்தியாவின் கோடிக்கணக்கான ஜனங்கள் இதற்கு முன் எத்தனையோ பேரால் வெற்றி கொள்ளப்பட்டு அவர்களுடைய ஆதிக்கத்துக்குட்பட்டிருக்கிறார்கள். ஆனால் இங்கிலீஷ் ஆதிக்கம் என்னும் பெருஞ் சுமையைப்போல் அவ்வளவு பாரமானதாய் வேறெதுவு மிருந்ததில்லை. முன் வந்தவர்களில் கெட்டவர்களும், கொடுங்கோலர்களும் இருந்தாலும் அவர்கள் எல்லாரும் நாட்டிலேயே தங்கிவிட்டனர். அவர்கள் ஜனங்களை அறியவும் ஜனங்கள் அவர்களை அறியவும் ஏது இருந்தது. இப்போதோ, ஒரு பெரிய ஜமீன்தாரியின் சொந்தக்காரன் அன்னியனாயிருந்து, அவனும் ஜமீன்தாரியில் வசியாமல் வெளிநாட்டில் வசித்தால் அந்த ஜமீன்தாரி எந்நிலையிலிருக்குமோ அந்நிலையில் இந்தியா இருக்கிறது."

### ஆண்ட்ரூ கார்னிஜி

கோடிக்கணக்கான பொருளைப் பல வகை அறங்களுக்கீந்து புகழ்பெற்றவரான ஸ்ரீ ஆண்ட்ரூ கார்னிஜி இந்தியாவுக்கு ஒருமுறை வந்து சென்ற பின்னர் "பத்தொன்பதாம் நூற்றாண்டும் பிறகும்" என்றபத்திரிகையில் எழுதியதாவது:—

"நான் இந்தியா முழுவதும் சுற்றுப்பிரயாணம் செய்திருக்கிறேன். பிரபல சுதேசித் தலைவர்களுடனும் பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்களுடனும் அறிமுகம் செய்து வைக்கப்பட்டேன். இந்தியன், அவனுடைய எஜமானனாகிய பிரிட்டிஷாரிடம் தன் குறைகளை வெளியிட்டுச் சொல்லாதிருப்பது இயல்பே. ஆனால் அமெரிக்கனிடம் அநுதாபம் பெறலாம் என்றெண்ணி அவன் நெருங்குகிறான். இதனால் இந்தியாவின் உண்மை நிலைமையை பிரிட்டிஷாரைவிட என்னால் நன்கு அறிந்துகொள்ளமுடிந்தது. படித்த இந்தியர்களிடையே தங்கள் தேசத்தைத் தாங்களே ஆளவேண்டு மென்னும் ஆசை பலமாக இருக்கிறது. இந்திய இளைஞர்கள், ஆங்கிலேயர் தங்கள் நாட்டில் யதேச்சாதிகார மன்னர் ஆட்சியை எதிர்த்துத் தீரமாகப் போராடியதை அறிவார்கள். வாஷிங்டனுடைய சரித்தையும், அமெரிக்க சுதந்திரப்போரின் வரலாற்றையும் அறிவார்கள். அன்னிய ஆட்சிக்குட்பட்டிருக்கும் ஒரு நாட்டார் இச்சரித்திரங்களைப் படித்து விட்டுத் தங்கள் நாட்டுக்கும் விடுதலை வேண்டுமென்னும் ஆவல் கொள்ளாதிருக்க முடியாது.... யாதொரு மனிதனோ அல்லது தேசமோ வேறொரு மனிதனை அல்லது தேசத்தை ஆளத்தகுதியுடன் ஆண்டவனால் படைக்கப்பட்டதாக நான் நம்பவில்லை."

### வில்லியம் ஜென்னிங்ஸ் பிரயன்

மிஸ்டர் பிரயன் தமது உலகப் பிரயாணத்தினிடையே இந்தியாவில்சிறிது காலம் தாமதித்திருந்தார். அவர் அமெரிக்கா திரும்பியதும் "இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி" என்ற தலைப்புடன் ஒரு துண்டுப் பிரசுரத்தை வெளியிட்டார். அதில் அவர் கூறுவதாவது :—

"நான் இந்தியாவில் இராஜப் பிரதிநிதி, மாகாணத் தலைவர்கள் உள்படப் பல பிரபல இங்கிலீஷ் உத்தியோகஸ்தர்களைக் கண்டு பேசினேன். அவ்வாறே படித்த இந்தியர்களில் ஹிந்துக்களையும், முஸ்லிம்களையும், பார்ஸிகளையும் கண்டு பேசினேன். நகரங்களிலும், கிராமங்களிலும் ஏழைகளையும் செல்வர்களையும் பார்த்தேன். புள்ளிக்கணக்குகளை ஆராய்ச்சி செய்தேன். பிரசங்கங்களைப் படித்தேன். அவற்றின் பயனாக நான் முடிவு செய்தது, இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சிமுறை நான் எதிர் பார்த்ததைவிட அதிக கேடானது என்பதேயாம்.

"அங்கேயுள்ள கஷ்டமெல்லாம் என்னவெனில், இங்கிலாந்து தன்னுடைய நன்மைக்காகவே இந்தியாவைக் கைப்பற்றிற்று; இந்தியாவின் நன்மைக்காகவன்று. தன்னுடைய நன்மைக்காகவே இந்தியாவை ஆள்கிறது; இந்தியாவின் நன்மைக்காகவன்று."

### சார்லஸ் எட்வர்ட் ரஸ்ஸல்

பல நூல்களின் ஆசிரியரான மிஸ்டர் ரஸ்ஸல் 1920-ம் வருஷத்தில் எழுதியதாவது:—

"அரசியல் யதேச்சாதிகாரத்தை ஆதரித்து ஓர் அமெரிக்கர் பேச முன் வருவாரானால் அதைவிட ஆச்சரியகரமானது வேறொன்றுமில்லை. உலகெங்கும் சுதந்திர ஆட்சி நிலைபெற வேண்டுமென்பது அமெரிக்காவின் இலட்சியமன்றோ? பின் அதன் இலட்சியந்தானென்னவென்று யாரேனும் தயவுசெய்து சொல்வார்களா? அரசியல் யதேச்சாதிகாரம் பிரிட்டிஷாருடையதாயிருக்கும் காரணத்தினால் அதற்குப் புகழ்ச்சி கூறவேண்டுமென்று கூறுதல் பலே தமாஷ்தான்! பிரிட்டிஷ் பெயருடன் கூடியதனால் அதன் குணம் மாறுபட்டுவிடுமோ? ருஷியாவிலும் துருக்கியிலும் உள்ள யதேச்சாதிகாரத்தை தோத்திரஞ் செய்யும்படி நம்மை யாரும் கேட்பதில்லை. ஜெர்மனியில் இருந்த யதேச் சாதிகாரத்தைப் புகழும்படியும் நம்மை எவரும் கேட்கவில்லை. பிரிட்டிஷ் யதேச்சாதிகாரத்தைப் பாராட்டுதற்கு மட்டும் காரணம் என்னவந்தது? ஒரு தேசத்தை மற்றொரு தேசத்தார் கைப்பற்றி ஆளுதல் எங்கே காணப்படினும் அது வெறுப்புக் குரியதேயாகும். இந்தியாவின் இப்போதைய நிலைஇதுதான். நாகரிகத்திற் சிறந்த ஒரு பெரிய தேசத்தார்மீது அன்னிய ஆட்சி சுமத்தப்பட்டிருக்கிறது.......

"இந்தியாவின் இந்தத் துயகரமான நிலைமையில் நகைப்புக்கிடமான அம்சம் இல்லாமற் போகவில்லை. பிரிட்டிஷார் தங்களுடைய கருணை மிகுதியால் இந்தியாவின் நன்மைக்காகவே அந்நாட்டின் மீது ஆதிக்கம் செலுத்துகிறார்களாம்! இந்திய மக்கள் அதை விரும்புவதுடன் அதற்காக நன்றி பாராட்டுகிறார்களாம்! நன்று, நன்று....... இஃதெல்லாம் உண்மையானால், அம்மக்களிடையே பேச்சு சுதந்திரத்தை அடக்க அவசியம் என்ன வந்தது? ஆயிரக்கணக்கானவர்களைச் சிறையிலடைக்க அவசியம் என்ன நேர்ந்தது? அவர்களிடம் எவ்வித ஆயுதமும் அகப்படாமல் சர்வஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொண்டிருப்பதேன்?...... கடைசியாக நான் கேட்பதென்னவென்றால், ஒரு நாட்டார் மீது இன்னொரு நாட்டார் வகிக்கும் யதேச்சாதிகார ஆதிக்கம் எங்கேனும் சகிக்கக் கூடியதாக யிருக்கமுடியுமா?"

### சேனேடர் நெப்ராஸ்கா

1920-ம் வருஷம் பிப்ரவரி மாதத்தில் அமெரிக்கா ஐக்ய இராஜ்யத்தின் ஸெனேட் சபையில் இந்தியாவைப்பற்றிப் பிரஸ்தாபிக்கப்பட்டது. அப்போது ஸெனேடர் ஜார்ஜ் நெப்ராஸ்கா என்பார், இந்தியாவுக்குச் சுயராஜ்யம் கொடுக்க மறுக்கும் பிரிட்டனின் செயலைக்குறித்துக் கண்டித்தார். அவர் கூறியதாவது :—

"இங்கிலாந்து இந்தியாவை நன்றாய் நடத்தாமலிருப்பதற்கு அது கானடாவை நன்றாய் நடத்துவது ஒரு சமாதானமாகாது. உலகில் எந்த தேசமும் அதனுடைய சம்மதமின்றி ஆளப்படக்கூடாது."

### ஸெனேடர் பிரான்ஸ்

1919-ம்ஞு அக்டோபர்மீ 14௳ அமெரிக்க ஐக்ய இராஜ்யத்தின் ஸெனேட் சபையில் வர்ஸேல் உடன்படிக்கையைப் பற்றி விவாதம் நடந்தபோது, அதை ஸெனேடர் ஜோஸப் பிரான்ஸ் என்பார் எதிர்த்து ஒரு பிரசங்கம் செய்தார். மேற்படி உடன்படிக்கையைத் தாம் எதிர்ப்பதற்கு அவர் கூறியகாரணங்களில் ஒன்று, அவ்வுடன்படிக்கை இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியை ஸ்திரமாக நிலை நாட்டுவதாயிருந்ததென்பதாகும். செல்வத்தில் சிறந்து செல்வாக்கு மிகுந்தவர்களாயிருந்த இந்திய மக்களை அவ்வாட்சி திக்கற்ற ஏழ்மை நிலைக்குக் கொண்டுவந்துவிட்டதென்று அவர் வாதித்துவிட்டு முடிவில் கூறியதாவது :—

"ஸெனேட் அங்கத்தினரான கனவான்களே, அமெரிக்க ஐக்ய இராஜ்யத்தாராகிய நாம், ஒரு பெரிய தேசத்தின் ஏறக்குறைய அடிமைத்தனமென்று சொல்லக் கூடிய நிலைமையை நிரந்தரமாக்குவதாயும், இது [illegible]

[illegible] தாங்கள் யாசித்த பணத்தை அனுப்புங்கள். [illegible]ள்ளத்தைப்பற்றி மிகைப்படுத்திக் கூறக் கொஞ்சமும் இடமில்லா வண்ணம், வெள்ளம் உண்மையிலேயே அவ்வளவு பயங்கரமானதாகையால், மேற்படிவிசேஷ நிருபர் இப்படி அசந்தர்ப்பமாகக் கொஞ்சம் கைச்சரக்கு சேர்த்து விட்டார்! வெள்ளம் வந்[illegible]ண்மைதான்.

# சட்டசபை மாயவலை

## ஆனால் அதில் விழுந்தவர் நன்கு சிக்கிக்கொள்ளவேண்டும்!

### டாக்டர் அன்சாரியின் அறிக்கை

முன்னமே எதிர்பார்க்கப்பட்ட வண்ணம் டாக்டர் எம். ஏ. அன்ஸாரி தற்கால அரசியல் நிலைமையைக் குறித்துத் தமது கருத்துகளைத் தெரிவித்து ஓர் அறிக்கை வெளியிட்டுள்ளார். அவ்வறிக்கையின் ஆரம்பத்தில், காங்கிரஸ் மகாசபையின் அக்கிராசன பீடத்துக்குத் தமது பெயரைப் பல மாகாண காங்கிரஸ் கமிட்டிகள் குறிப்பிட்டிருப்பது குறித்து அவர் தமது நன்றியைத் தெரிவித்துவிட்டு, காங்கிரஸ்காரர் தம்மை முடிவாக அப்பீடத்துக்குத் தெரிந்தெடுப்பதற்கு முன் தமது அரசியல் அபிப்பிராயங்களை அவர்களுக்குத் தெரிவிக்க விரும்புவதாகவும், பின்னால் தவறான மனிதரைத் தேர்ந்தெடுத்தோமே யென்ற ஏமாற்றம் அவர்களுக்கு ஏற்படக் கூடாதென்றும் கூறிப் பின்னர் அவர் தெரிவிப்பதாவது :—

"நான் 1920,21-ம் ஆண்டுகளில் ஒத்துழையாமையில் கொண்டிருந்த பூரண நம்பிக்கை இன்று ஒரு சிறிதும் குன்றவில்லை. அந்த இயக்கத்தின் தலைவர்கள் நம்மிடமிருந்து எதிர்பார்த்தனவற்றை நாம் செய்யத் தவறிவிட்டோம். ஆதலின் அவ்வியக்கமும் உத்தேசிக்கப்பட்ட பயன்களை அளிக்கவில்லை. ஆனால் இதனாலேயே, உலகில் மாந்தர்களுக்கு என்னென்ன தொல்லைகள் உண்டோ அவ்வளவுக்கும் இவ்வியக்கமே காரணம் என்று கூறுவோருடன் நான் ஒத்துப்போகமுடியாது.

பஞ்சாபில் ஓட்வியரின் கீழ் ஏற்பட்ட கொடுங் கோன்மைக்கும், டையர் செய்த மகாபாதகங்களுக்கும் நாம் அளிக்கக் கூடிய ஏற்ற பதில், மகாத்மா காந்தி 1918லிருந்து 22வரையில் நடத்திய இயக்கம் ஒன்றுதான் என்று நான் உறுதியாகக் கூறுகிறேன். அந்தக் காலத்தில் நமக்கு இழைக்கப்பட்ட அவமானங்களை வாய் திறவாமல் நாம் பொறுத்துக்கொண்டிருந்திருப்போமே யானால் நமது நாட்டாருக்குக் கதிமோட்சமே கிடையாது என்று நான் நம்பிக்கை இழந்திருப்பேன். திடீரென எதிர்பாராத சம்பவங்கள் ஏதாவது நேர்ந்தாலொழிய, நாம் நம்மை நாமே கட்டுப்பாடு செய்துகொண்டு சுய நம்பிக்கையுடன், பிறர்உதவியை எதிர்பாராமல்உழைப்பதினாலேயே விடுதலை பெறமுடியுமென நம்புகிறேன். என்றைக்காவது வரிகொடாமை, சட்டமறுப்பு போன்ற இயக்கம் நடத்தித்தான் கடைசியாக வெற்றிபெறப் போகிறோம் என்ற திட நம்பிக்கை எனக்கு உண்டு. ஒரு பெரிய போரின் அயர்விற்குப் பிறகு மீண்டும் மெதுவாக இந்தியா தலை கிளம்ப ஆரம்பித்திருக்கிறது. விரைவில் புத்துயிர்பெற்றுத்தன் இலக்ஷியத்தைச் சாதித்துக் கொள்ளும் என்று நான் உறுதி கொண்டிருக்கிறேன்.

#### இன்றைய உண்மை நிலை

ஆனால் ஒத்துழையாமைக்காரர்கள், ஒத்துழைப்புக்காரர்கள் யாரா யிருந்தாலும் உண்மை நிலையை நேராகக் கவனிக்க வேண்டும். நான் ஒத்துழையாமை தர்மத்திலேயே பூரண நம்பிக்கை வைத்திருந்தாலும், பயனற்ற பெரிய இலட்சியங்களுக்குப் பின்னால் மறைந்துகொள்ள முயல்வது நியாயமாகாது. இன்று நாம் எந்நிலையில் இருக்கிறோம் என்பதை நன்கு ஊன்றிக் கவனித்தாக வேண்டும்; அதற்குச் சத்திய நெறி நின்று மனதிற்குக் கசப்பாயிருந்தாலும் இரக்கமின்றி, பயமின்றி உண்மையை மொழிந்து விடுதலே சரியாகும். காங்கிரஸ் 1923 லிருந்து 27 வரையில் சென்ற நான்கு வருஷங்களாக அமைத்த திட்டங்கள் ஒன்றாவது நிறைவேற்றப்படவில்லை என்பது உறுதி. இந்த நான்கு வருஷ காலமாக நம்மைக் காங்கிரஸ் என்னென்ன செய்ய வேண்டுமென்று எதிர்பார்த்துக் கட்டளையிட்டதோ, அவற்றில் ஒன்றையாவது நாம் நிறைவேற்றி வைக்கவில்லை. நாம் தவறிவிட்டோம் என்பதை அங்கீகரித்துக் கொள்ளவேண்டும். ஒத்துழையாமைக் காலத்தில் உன்னத நிலையில் நின்ற நாம் இன்று பாதாளத்தில் வீழ்ந்து கிடக்கின்றோம். 1922-ம் ஆண்டிலிருந்து படிப்படியாக ஒத்துழைப்பைநோக்கியே செல்கிறோம். முதலில் ஒத்துழையாமைக்கு விரோதமாக இருந்த ஒரு கூட்டத்தார் தாங்களும் ஒத்துழையாதார் தான் என்று வற்புறுத்திச் சொல்லிக் கொண்டே பெரும்பான்மையோர் கருத்துக்கு எதிரிடையாகப் பிரசாரஞ் செய்தார்கள்; பிறகு இவர்களுக்குள்ளேயே சிறுபான்மைக் கட்சி ஒன்று தோன்றிற்று. இவர்களுடைய பலமும் நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. அவர்கள் ஒத்துழைப்புக்காரர் என்ற பெயரை ஒப்புக்கொண்டபோதிலும், அவர்களுடைய வேலைகளில் முற்றும் ஒத்துழைப்பு மணம் வீசுவதாகக் கூறினால் அதை மறுப்பார்கள். எது எப்படியாகிலும், நாளுக்குநாள் ஒத்துழைப்பு வழியிலேயே நாடு நடத்தப்படுகிறது என்பதை மறுக்க முடியாது. நாட்டையும், நம்மையும் நாம் ஏமாற்றாமல் உண்மையை விளக்க உரைக்கிறதானால், கலப்பற்ற ஒத்துழைப்பை நோக்கியே நாம் மிதந்து செல்கிறோம் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும்.

#### ஏமாற்றம் வேண்டாம்

இத்தகைய நிலைமையில் நாம் செய்ய வேண்டியது என்ன? என்னைப் பொறுத்த மட்டில் 1920-21-ல் தேசத்தில் இருந்த தீவிர ஒத்துழையாமை இயக்கம் மீண்டும் தோன்றினால் மகிழ்ச்சியடைவேன். அந்த ஆண்டில்அவ்வியக்கத்தை நடாத்திய தலைவர்களுக்கிருந்த மகாசக்தி எனக்கும் இருக்கிறதென்ற தைரியம் எனக்கு ஏற்பட்டால்,நான் காங்கிரஸின் தலைமையை ஏற்று அடுத்தவருஷத்தில், பெரிதும் மாறுதலான நிலைமையில் மீண்டும் ஒத்துழையாமைத் திட்டத்தை நிறைவேற்ற முயலுவேன்.

நமக்கு அளிக்கப்பட்டிருக்கும் அரசியல் அமைப்புச் சம்பந்தமாக, வெவ்வேறு பெயர்கள் சூட்டிக்கொண்டு தங்களையும் மற்றவர்களையும் ஏமாற்றிக்கொள்ள வேண்டாமென்றுமட்டும் நான் எனது சகோதர காங்கிரஸ்காரர்களையும், தேசமக்களையும் கேட்டுக்கொள்ள வேண்டியிருக்கிறது. இந்த அரசியல் அமைப்பை மத்திய அரசாங்கத்திலோ, மாகாணங்களிலோ நடத்திவைப்பதால் ஒரு நன்மையும் விளையாதென்று நான் முன்னமே கருதினேன். சென்ற சில ஆண்டுகளாகக் காங்கிரஸ்காரர்களும் இதை அனுபவத்தில் அறிந்துகொண்டு விட்டார்கள். இந்த அரசியல் அமைப்புவெறும் மாயைதான்; அது நம்மைக் கட்டும் ஒருவலைதான். ஆனால் சட்டசபை வேலையில் கலந்துகொண்டு, அரசாங்கத்துடன் ஒத்துழையாமலிருக்கிறது என்பது சாத்தியமில்லை. சட்டசபைகளால் சில சில்லரைச் சீர்திருத்தங்கள் பெறுவது சாத்தியப்படலாம். ஆனால் அதற்கு ஒத்துழைப்பை அளிக்கத் தயாராக இருக்கவேண்டும். என்போன்ற கொள்கை யுடையவர்கள் ஒரே ஒரு வழிதான் பின்பற்றக் கூடும். அதாவது, சட்ட சபைகளைப்பற்றிச் சிந்தியாது விலகியிருத்தல்தான். ஆனால் என் கருத்துக்கு விரோதமாயுள்ளவர்கள் தான் இன்று காங்கிரசில் பெரும்பான்மையோரா யிருக்கிறார்கள். அவர்கள் சட்டசபைகளிலேயே இருத்தல் கூடும். ஆனால் அரசாங்கத்துடன் ஒத்துழைக்கப் போகிறோம், மந்திரி சபைகளில் கலந்து உழைக்கப் போகிறோம் என்று ஒளிவு மறைவு இல்லாமல் அவர்கள் பகிரங்கப்படுத்திவிடவாவது வேண்டும். மேலும், இப்பொழுது சட்டசபைகளிலுள்ள கட்சிகளெல்லாம் தங்கள் சண்டை சச்சரவுகளை ஒழித்துவிட்டு, வேற்றுமைகளைக் களைந்து ஜனக்கட்சி என்று ஒரே கட்சியாக நின்று ஒத்துழைப்பினால் அடையக்கூடிய லாபங்களைப் பெற முயலும்படி வேண்டிக்கொள்கிறேன். ஆனால் தங்கள் தோல்வியை முதலில் அங்கீகரித்துக்கொள்ளுதல் வேண்டும்.

இப்பொழுது நமக்கு இரண்டே வழிகள் இருக்கின்றன. முதலாவது, தோல்வியுற்றோம் என்று சரண்புகுதல்; மற்றது அடுத்த போருக்குத் தயார் செய்வது. இழிவான வகையில் சரண்புகுவதற்கு நான் என்றைக்கும் உடன்பட முடியாது. ஆகவே, அடுத்த போராட்டத்துக்குத் தயார் செய்துகொள்ள ஆரம்பிப்போம். நாம் முன்னர் அடைந்த தோல்வியின் படிப்பினையை மனதில் ஆழ்த்தி வேலை செய்யப்புகுவோம்."

#### கதருக்கு ஆபத்து

நமது இயக்கம் தோல்வியுற்றதற்கு மிக முக்கியமான காரணம் சமூக வேற்றுமைகளே என்றும், எனவே தம்மைக் காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுத்தால், தேசத்திலுள்ள பற்பல சமூகங்களையும் ஒற்றுமைப்படுத்தி ஒரு தேசமக்களாகச் செய்யும் வேலையிலேயே முதன்மையாகத் தாம் கவனஞ்செலுத்த உத்தேசமென்றும், பம்பாயில் அகில இந்தியக் கமிட்டியால் அங்கீகரிக்கப்பட்ட தில்லி முஸ்லிம்களின் பிரேரபணைகள், தில்லிஒற்றுமை மகாநாட்டின் தீர்மானங்கள் இவற்றை நாடெங்கும் பரப்பவேண்டுமென்றும் டாக்டர் அன்சாரி சொல்லிவிட்டு மேலே கூறுவதாவது:—

"எல்லா அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்களும், எல்லாச் சமூகத்தினரும் தங்கு தடையின்றி வந்து சேருமாறு காங்கிரஸின் கதவுகளைத்திறந்து விடவேண்டும். சென்னையில் நமது பிராமணரல்லாத சகோதரர்கள் செய்வதுபோல், மிதவாதிகளும், தனிக்கட்சியாரும், கிறிஸ்துவர்கள், ஆங்கிலோ இந்தியர்கள், ஐரோப்பியர்கள் முதலியோரும் ஏராளமாகக் காங்கிரஸில் சேர்வதற்கு விசேஷ முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். அப்போது தான் காங்கிரஸ், தேசத்தின் உண்மையான பிரதிநிதி சபையாகும். இதன்பொருட்டு நமது அடிப்படையான கொள்கைகளைத் தவிர மற்ற எல்லாவற்றையும் விட்டுக்கொடுக்கத் தயாராயிருக்க வேண்டும். அவசியமானால், கதர் அணிதலைக் கட்டாயமாகச் செய்யும் விதியையும் எடுத்து விடலாமென்று நான் பணிவுடன் யோசனை கூறுவேன். கதர் இயக்கம் தேசத்தில் நிலைபெற்றுவிட்டது, காங்கிரஸ் கட்டாய விதியைத் தளர்த்துவதால் கதர் அபிவிருத்தி ஒரு சிறிதும் தடைப்படாது என்பது என் உறுதியான எண்ணம். மகாத்மா காந்தியையும், டாக்டர் பி. சி. ரேயையும் தலைவர்களாகக்கொண்ட சர்க்கா சங்கத் தொண்டர்கள் விதைத்த விதை இதற்குள்ளாக முளைத்துத் தளிர் விட்டுவிட்டது. இன்னும் சில ஆண்டுகளில் அது பெரிய ஆலவிருட்சமாக வளர்ந்துவிடுமென்பதில் சந்தேகமில்லை."

தொழிற் சங்கங்கள் அமைக்கவேண்டிய அவசியத்தையும், இந்தியாவுக்கு ஒரு சுயராஜ்ய திட்டம் தயாரிப்பதின் அவசியத்தையும்பற்றிக் கூறி டாக்டர் அன்சாரி தமது அறிக்கையை முடித்திருக்கிறார்.

## உதிர்ந்த மலர்கள்

(மகாத்மாகாந்தி (மாணுக்கர் கூட்டத்தில்):— மனிதர்களுக்குத் தொண்டு செய்வதின் மூலம் இறைவனைத் தரிசிக்க நான் முயன்று கொண்டிருக்கிறேன். இறைவன் மேலுலகிலுமில்லை, கீழுலகிலுமில்லை யென்பதை நான் நன்கறிவேன். மற்று, அப்பெருமான் ஒவ்வொரு மனிதரிடத்தும், அவர் ஹிந்துவாயினும் முஸல்மானாயினும் கிறிஸ்துவராயினும், ஆணாயினும் பெண்ணாயினும், பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் பஞ்சமர் ஆகிய எவராயினும், அவ்வொவ்வொருவரிடத்துமே இருக்கிறார்.

* * *

மேற்படியார் :—ஆண்டவன் மகா பொறுமையுள்ளவர். அவரைப்பற்றி எவ்வளவு தப்பபிப்பிராயங்களையும், எவ்வளவு அவதூறுகளையும் எத்தனை காலமாக அவர் பொறுத்துக்கொண்டிருக்கிறார் பாருங்கள்.

* * *

மேற்படியார் :— ஏசுநாதர், முகமது இவர்களுடைய காலத்தில் மோட்டார்வண்டி இருந்ததில்லை. அதனால் அவர்களுடைய வேலை தடைப்பட்டதுண்டா?

* * *

மேற்படியார் :—உங்கள் மதத்தில் உள்ள உண்மை வேறு மதங்களில் இருக்குமென்று நீங்கள் கருத முடியாவிடினும், வேறுமதத்தார் உங்களைப்போலவே உண்மையாளர் என்றேனும் நீங்கள் நம்பவேண்டும்.

* * *

ஸ்ரீ ஜமுனாதாஸ் மேதா எம். எல். ஏ.:— காங்கிரஸ் உத்தியோகம் ஒப்புக் கொள்வதென்று தீர்மானித்தால் தேசத்தின் பொது வாழ்வு குலைந்தே போகும். சென்ற ஏழு வருஷங்களில் ஆயிரக்கணக்கான இளைஞர்கள் செய்த தியாகமெல்லாம் பயனற்றதாகும்.

* * *

மேற்படியார்:— தேசபந்து தாஸ் இரட்டையாட்சி முறையை உயிருள்ளளவும் பகைத்து வந்தார். இப்போது உத்தியோக மேற்கும் தீர்மானஞ் செய்தல் அவருடைய ஞாபகச் சின்னத்தின்மீது நன்றி கெட்ட, அழியா அவமானத்தைத் தருகின்ற வாசகத்தைப் பொறிப்பதாகும்.

* * *

மேற்படியார்:— காங்கிரஸில் உத்தியோகத்துக்குச் சூழ்ச்சிபுரிந்தலையும் தலைவர்கள் வெற்றி பெற்றால், அரசாங்கத்தார் தாங்கள் என்றும் எதிர்பாராத பெரும் வெற்றியடைந்தவர்களாவார்கள். இச்சதியாலோசனையில் ஈடுபட்டிருந்தவர்களின் பெயர்கள் இந்திய சரித்திரத்தில் தேச விடுதலைக்குத் துரோகம் செய்தவர்கள் ஜாபிதாவில் பொறிக்கப்படும்.

## ஊர் வம்பு

"தமிழ்த்தேனீ" திரட்டியது

குஜராத் வெள்ளத்தினால் கஷ்டப்படுவோரின் சார்பாக நாம் இராஜப் பிரதிநிதிக்கு அனுப்பிய மானதச் செய்தி பயனளித்தது குறித்து நேயர்கள் மகிழ்வார்களென நம்புகிறோம்! இர்வின் பிரபு மேற்படி கஷ்ட நிவாரணத்துக்காக ஸ்ரீ வி. ஜே. படேல் ஆரம்பித்திருக்கும் நிதிக்கு ரூ 500 நன்கொடை யளித்திருக்கிறாராம்.

* * *

மிஸ் மேயோ என்பவர் எழுதிய "இந்தியத்தாய்" என்னும் புத்தகத்தில், "சென்னை நகரவாசிகள், வடிகட்டிய தண்ணீர் பாதியும் சாக்கடை ஜலம் பாதியும் கலந்துவிடப்பட்ட குழாய்த் தண்ணீரைக் குடிக்கிறார்கள்" என்று எழுதி வைத்திருக்கிறாராம்.

* * *

பாவம்! அந்தப் பெண்மணி சென்னைக்கு வந்திருந்தபோது, கூவம்நதி ஜலத்தைக் குழாய்த் தண்ணீர் என்று கொடுத்து யாரோ ஏமாற்றி யிருக்கவேண்டும்!

* * *

சென்னையில் குடித்த கூவம்நதி நீரையெல்லாம் அந்தம்மாள் சீமைக்குச் சென்று தன் புத்தகத்தின் ஏடுகளில் கக்கியிருப்பதாகத் தோன்றுகிறது!

* * *

காங்கிரஸை உத்தியோகக் குழியில் வீழ்த்தச் செய்யப்படும் முயற்சியை, பம்பாயைச் சேர்ந்த ஸ்ரீமான் கின்வாலா கண்டிக்கையில், மத்திய மாகாணத்தில் பாஸ்பா ஒத்துழையாதார் மந்திரி பதவி ஒப்புக்கொண்டு என்ன சாதித்துவிட்டனர்? என்று கேட்கிறார்.

* * *

அவர்களுக்கு முன்னால் நிர்வாகசபைப் பதவி ஒப்புக்கொண்ட ஸ்ரீமான் தம்பி என்ன சாதித்தார்? தம்பிக்குப் பின்னால் போன அண்ணன்மாரும் அதைத்தான் சாதித்தார்கள்.

* * *

"இராஜப் பிரதியோடும் கவர்னரோடும் நான் மந்திரி பதவியைப்பற்றிப் பேசவில்லை என்பதற்கு, நான் அவர்களிடம் பேசியபோதிருந்த ஆண்டவனே சாட்சி" என்று ஸ்ரீமான் சத்தியமூர்த்தி கங்கை கொண்டான் மண்டபத்தில் அறைந்தாராம்.

* * *

அப்போது அம்மண்டபத்தின் தூண் ஒன்றில் இருந்த நரசிம்மமூர்த்தி சிரக்கம்ப கரக்கம்பம் செய்து "சத்தியம் சத்தியம்" என்று ஆர்ப்பரித்தது உண்மைதானோ வென்று நாம் விசாரித்ததில் புலனாகவில்லை.

* * *

அப்படிக் கேள்விப்பட்டதாகப் பலர் சொல்கிறார்களே யல்லாமல், நேரே பார்த்ததாகச் சொல்ல எவரும் முன் வரமாட்டேனென்கிறார்கள்.

* * *

மேலும் ஸ்ரீ பார்த்தசாரதி சுவாமி கோயில் அர்ச்சகரின் கனவில் ஆண்டவன் தோன்றி "எனது அருமைப் பக்தன் சத்தியமூர்த்தியைச் சந்தேகிப்பவர்களை நித்திய நிரயத்தில் வீழ்த்துவேன்" என்று அருளியதாகவும் நகரில் பலமான வதந்தி உலாவுகிறது.

* * *

அயினும் ஆண்டவன் கோபத்துக்கும் நித்திய நிரயத்துக்குங்கூடத் துணிந்த சந்தேகப் பிராணிகள் சிலர் இருக்கவே செய்கிறார்களாம். அவர்கள், "விண்ண ஆண்டவனைச் சாட்சிக் கிழுப்பதைவிட இராஜப்பிரதிநிதியிடமும் கவர்னரிடமும் ஓடோடியும் சென்று பேசிய அவசர விஷயந்தானென்னவென்று சொல்லி விடலாமே? இவ்வளவு மூடுமந்திரமென்?" என்று கேட்கிறார்களாம்.

* * *

இராஜப் பிரதிநிதியும், அரசாங்கமும் உட்பட எல்லாரையும் காங்கிரஸுக்குள் வரும்படி அவர் கூவி அழைத்திருப்பது இன்னும் சந்தேகத்தை அதிகப்படுத்துவதா யிருக்கிறதே யொழியக் குறைப்பதாயில்லை யென்று அவர்கள் சொல்கிறார்களாம்.

* * *

"எங்களுக்கு உண்மையில் உத்தியோகத்தில் ஆசையிருந்தால் சபர்மதி ராஜியை எதிர்த்து உடைத்திருக்க மாட்டோம். அதையாதாரமாகக் கொண்டு பதவிகளை ஏற்றுக் கொண்டிருப்போம்" என்றும் வாதத்தில் நிபுணரான சுயராஜ்யக் கட்சி உபதலைவர் மேற்படி கூட்டத்தில் சொன்னாராம்.

தொன்னைக்கு நெய் ஆதாரமா, நெய்க்குத் தொன்னை ஆதாரமா என்பது போன்ற ஒரு பெரிய சந்தேகத்தை இது சிலருக்குக் கிளப்பிவிட்டிருக்கிறதாம்.

* * *

சபர்மதி ஒப்பந்தத்தை எதிர்த்து உடைத்திராவிடில் தேர்தலில் ஜெயித்திருக்கவே முடியாதே? பின்னர் அதை ஆதாரமாகக் கொண்டு பதவி ஏற்பதெப்படி என்று அவர்கள் ஐயுறுகிறார்கள்.

* * *

ஸ்ரீமான் சத்தியமூர்த்தி கூறுவதெல்லாம் சத்தியமாகத்தான் இருக்குமென்று நம்பும் அத்தியந்த பக்தர்கள் சிலர், அவர் எப்போது தொன்னைக்கு நெய் ஆதாரம் என்று சொல்கிறாரோ அப்போது அப்படித்தான் இருக்கவேண்டுமென்று எண்ணித் தொன்னையும் நெய்யும் கொண்டு பரிசோதிக்கத்தொடங்கி யுள்ளார்களாம்.

* * *

இந்தப் பரிசோதனையின் பயனாக நெய் மார்க்கெட்டில் கிராக்கி மிகவும் அதிகமாகிவிட்டதென்று வதந்தி உலாவுகிறது.

* * *

புதிய தில்லியில் கட்டப்பட்ட இந்திய சட்டசபை மண்டபத்தில் சிறு பிளவுகள் தோன்றியிருக்கின்றனவாம். அப்பிளவுகளுக்குக் காரணம் புதிய தில்லியின் சீதோஷ்ண மாறுபாடே என்று சிம்லாவில் கூடியிருக்கும் இந்திய சட்டசபையில் ஸர் பூபேந்திர மித்ரா அறிவித்தார்.

* * *

சட்டசபை அங்கத்தினர்களுக்குள் பிளவு ஏற்பட்டுப் பிறகு கூடுவதற்கும் சீதோஷ்ண மாறுபாடே காரணமாயிருக்கலாமோ?

* * *

சென்னையில் சண்டைபோட்டுக்கொண்ட ஸ்ரீமான்கள் சீனிவாசய்யங்காரும், ஷண்முகம் செட்டியாரும் சிம்லாவில் ராஜியாய்ப் போய்விட்டார்களென்னும் செய்தி இச்சந்தேகத்தைப் பலப்படுத்துவதாய் இருக்கிறது.

* * *

சென்னை வெப்பம் மருந்த இடம்; அதிலும் இவ்வருஷக் கோடைமிகக் கொடுமை. சிம்லாவோ அதிகாரவர்க்க தெய்வங்களின் உருகிய மூளையைக் கூடக் குளிரவைத்துப் பனிக் கட்டியாக்கக் கூடிய பிரதேசம். வெப்பம் கோபத்தை மூட்டுமென்றும், தண்மை சாந்தத்தை வளர்க்கு மென்பதும் யாருக்குத் தெரியாது?

* * *

நாட்டில் வெகு விருப்பாகவும், ஆத்திரமாகவும் அதிகாரவர்க்கத்தைத் தாக்குகிறவர்கள் சிம்லா போனதும் சாந்தமூர்த்திகளாகி விடுவதற்குக் காரணமும் இதுவேதானன்றோ?

* * *

கல்கத்தா வைத்தியக் கல்லூரியின் தலைமை ஆசிரியர் கர்னல் பர்னார்டோ ஐ. எம். எஸ். மேற்படி கல்லூரி குமாஸ்தாக்கள் இருவர்மீது நடக்கும் மோசடிவழக்கில், குறுக்கு விசாரணை செய்யப்பட்டார்.

* * *

விசாரணையின் போது, அவருக்கு ஒரு பந்தயக் குதிரை சொந்த மென்றும், அவர் நெடுநாளாகக் குதிரைப் பந்தயத்துக்குப் போவதும் பணம் வைப்பதும் உண்டென்றும், ஆனால் அந்த இரண்டு இனங்களிலும் தமக்கு எப்போதும் ஆதாயமே கிடைத்து வந்திருக்கிறதென்றும் சொன்னாராம்.

* * *

குதிரைப் பந்தயத்தில் எப்போதும் ஜெயிக்கும் வித்தையை அவரிடமிருந்து கற்றுக்கொள்ளச் சென்னையில் பலர் ஆவலாயிருப்பதாக அறிகிறோம். அவர் வைத்தியக் கல்லூரியைக் கட்டிக்கொண்டு அழுவதைவிட மேற்படி வித்தை கற்றுக்கொடுக்குங் கல்லூரி ஒன்று வைத்து நடத்தல் லாபகாமாயிருக்குமே!

* * *

"சுயராஜ்யக் கட்சியார்க்கும் மிதவாதிகளுக்கும் என்ன வித்தியாசம்?" என்று 'அரசியல்மாணுக்கர்' நம்மை வினவுகிறார்.

* * *

நமது விடை:— நண்பரே! அந்தச் சந்தேகம் தான் வெகு நாளாக நம்மனதிலும் குடிகொண்டிருந்தது. கடைசியாக,சென்னையின் அசல் சுயராஜ்யக் கட்சிப் பத்திரிகை அதை நிவர்த்தி செய்ய மனமுவந்திருப்பது குறித்து நம்முடன் சேர்ந்து நீரும் நன்றி கூறுவீராக. டாக்டர் அன்சாரியின் அறிக்கையைப்பற்றி எழுதுகையில் அப்பத்திரிகை "முன் சட்டசபைகளிலிருந்த மிதவாதிகளின் புத்திப் போக்குக்கும் இப்பொழுது சட்டசபைகளிலுள்ள காங்கிரஸ்காரர்களின் புத்திப் போக்குக்கும் பெரிய வித்தியாசமுண்டென்பதை அவர் உணரவில்லை" என்று கூறுகிறது. இப்போது புரிந்ததா? வித்தியாசம் புத்திப் போக்கிலே இருக்கிறது! நீர் எங்கெல்லாமோ போய்த் தேடினால் அதை எப்படிக்கண்டு பிடிக்கமுடியும்?

* * *

"ஜீவகாருண்ய சிலர்" நமக்கு எழுதுவதாவது:— "குஜராத் வெள்ள விபத்தைப் பற்றிப் படித்துப் பெரிதும் மனங் கசிந்திருந்த நிலையில் மேற்படி கஷ்ட நிவாரணத்திற்குக் கொஞ்சம் பணம் அனுப்பத் தீர்மானித்திருந்தேன். ஆனால் நேற்று "டைம்ஸ் ஆப் இந்தியா" பத்திரிகை படித்ததும் பெரிய சந்தேகத்தில் வந்துவிட்டது. அப்பத்திரிகையின் விசேஷ நிருபர் வெள்ளப் பிரதேசங்களுக்குச் சென்று பார்வையிட்டு அனுப்பியுள்ள விவரத்தில், "மரங்களின் மீது பல குடும்பங்கள் நாலைந்து நாள் வரை அன்னம் தண்ணீர் இல்லாமல்" வசித்ததைத் தாம் கண்ணால் பார்த்ததாகச் சொல்கிறார். ஏன்? தமாஷாயில்லையா? குடிப்பதற்கே தண்ணீர் அகப்படாத வெள்ளம் எத்தகைய வெள்ளம், ஐயா? எல்லாம் பெரும் புரட்டோ என்ற ஐயம் எனக்குண்டாகிவிட்டது. பணம் அனுப்பட்டுமா, வேண்டாமா? என்ன யோசனை சொல்கிறீர்கள்?"

* * *

நமது பதில் வருமாறு :— "பத்திரிகை நிருபரின் பாவம் கஷ்டப்படுவோர்மீது விழ வேண்டாம். தயவுசெய்து உடனே தாங்கள் உத்தேசித்த பணத்தை அனுப்புங்கள். வெள்ளத்தைப்பற்றி மிகைப்படுத்திக் கூறக் கொஞ்சமும் இடமில்லா வண்ணம், வெள்ளம் உண்மையிலேயே அவ்வளவு பயங்கரமானதாகையால், மேற்படிவிசேஷ நிருபர் இப்படி அசந்தர்ப்பமாகக் கொஞ்சம் கைச்சரக்கு சேர்த்து விட்டார்! வெள்ளம் வந்தது உண்மைதான்.

## மணித்திரள்

மீன்களில் 19,000 வெவ்வேறு வகை இதுகாறும் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன.

* * *

பூமியிலுள்ள எல்லா சமுத்திரங்களிலும் சேர்ந்து மொத்தம் 30கோடி கன மைல் அளவுள்ள ஜலம் இருக்கிறதாம்.

* * *

லாஸ் ஏஞ்சலஸ் என்னும் நகரத்தின் வியாபாரச் சங்கத்தாரின் கண்காட்சி சாலையில் 100 வயதான ஓர் ஆமை இருக்கிறதாம்.

* * *

லண்டன் நகரில் இலவச புத்தகசாலைகள் எண்பது இருக்கின்றனவாம். ஓர் ஆண்டில் சராசரி இரண்டு கோடி புத்தகங்கள் இப்புத்தக சாலைகளிலிருந்து ஜனங்களால் இரவல் வாங்கப்படுகின்றன. இவற்றுள் 45 லட்சம் புத்தகங்கள் குழந்தைகளால் இரவல் வாங்கப்படுவனவாம்!

* * *

உலகில் வசிக்கும் பிராணிகள் எல்லாவற்றினும் பெரியது நீலத் திமிங்கலம். இந்தப் பிராணி 90 அடி நீளம் வளர்கிறது. 30டன் நிறை உள்ளதாகிறது. இது வேகமாய் நீந்தினால் மணிக்கு 30 மைல் போகுமாம். இவ்வாறு நீந்தும்போது 650 குதிரைகளின் சக்தியை இப்பிராணி உபயோகிக்கிறதாம்!

* * *

ஆச்சரியம், பயம், காதல் முதலிய உள்ளக்கிளர்ச்சிகளாலும், மதுபானம், காப்பிக்குடி, சுருட்டுப்பிடித்தல் முதலியவற்றாலும் மனிதனுடைய இதயத்துடிப்பில் ஏற்படும் நுண்ணிய மாறுதல்களைக் கண்டுபிடிக்க ஜெர்மனி தேசத்து டாக்டர் ருடால்ப் சோல்ட் ஸ்மித் என்பவர் ஒரு கருவியைக் கண்டுபிடித்திருக்கிறார்.

* * *

உலகில் பெரிய கடிகாரம் சேத்தாமஸ் தொழிற்சாலையில் செய்யப்பட்டுச் சமீபத்தில் நியூயார்க் நகருக்குக் கொண்டு போகப்பட்டதாம். இதுவரை அங்கரில் கால்கேட் தொழிற்சாலையின் உச்சியில் இருந்த பழைய கடிகாரத்துக்குப் பதிலாக இது வைக்கப்படுமாம். இந்தப்பூத கடிகாரத்தினுடைய முகப்பின் குறுக்களவு 50 அடி; இதன்நிமிஷ முள்ளின் நீளம் 37 அடி 3அங்குலம்; அகலம் 3 அடி ஆறு அங்குலம்.இரவில் வெகு தூரத்திலிருந்து பார்ப்போருக்கும் தெரியும் பொருட்டு இந்த முள்ளின் இரண்டு ஓரத்திலும் 120 மின்சார.விளக்குகள் பொருத்தப்பட்டிருக்கின்றனவாம். மணி முள்ளின் நீளம் 27 அடி, ஆனால் நிமிஷமுள்ளைவிட இதன் அகலம் மிக அதிகம். இந்த முள்ளில் 100 மின்சார விளக்குகள் இருக்கின்றன. கடிகாரத்தின்முகப்பு நல்ல வெள்ளையாகவும், இந்த முட்கள் அழுத்தமான கறுப்பு வர்ணமாகவும் இருப்பதால் பகலிலும் தூரத்திலிருப்பவர்களுக்குத் தெளிவாகத்தெரியும். இந்த கடிகாரம் 4டன் நிறையுள்ளதாம்.

என்கடன் பணிசெய்து கிடப்பதே
எவ்வுயிர்க்கும் அன்பாயிரு
நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே.—(அப்பர்.)

சென்னை 1927ஆ ஆகஸ்ட்மீ 24௨

## "ஏல விவசாயி"

"ஏல விவசாயி" என்னும் பெயர் வாய்ந்த ஒரு தமிழ் மாதாந்த சஞ்சிகை எமது பார்வைக்கு வந்தது. அதைக் கண்ணுற்றபோது எமக்குற்ற மகிழ்ச்சிக்கோர் அளவில்லை. நமது நாட்டில் பலதிறப் பத்திரிகைகள் தோன்றி வளர்ந்து வருகின்றன. அவைகளுள் விவசாயத்தைப் பற்றிய பத்திரிகைகள் மிகச்சில. அம்மிகச் சிலவும் வெளியீட்டளவில் கடனாற்றி வருகின்றன. "ஏல விவசாயி"யோ வெறும் வெளியீட்டளவில் தங்காட்டவில்லை. அஃது உரம்பெற்ற கால்கொண்டு பொருந்திய அமைப்பெனும் ஒரு நிலையத்தினின்றுந் தோன்றுகிறது. "ஏல விவசாயி"யின் தோற்றுவாய் நல்லூற்றுடையது என்பது செவ்விதின் விளங்குகிறது.

"ஏல விவசாயி" என்னுங் குழவி நல்லமைப்பு வாய்ந்த ஒரு சங்கமெனுந் தந்தையையும், ஏல விவசாயத் தொழிலெனுந் தாயையுங் கொண்டுண்மையால், அஃது இடையூறின்றி வளர்ந்து நாட்டுக்கு நலன் செய்யுமென்பதில் ஐயமில்லை.

எல்லாத் தொழில்களினுந் தலைசிறந்தது விவசாயமென்பது எவரும் ஒப்ப முடிந்த உண்மை. விவசாயம் வாழ்விற்கு உயிர் போன்றது. அவ்விவசாயத்தைப் பெருமிதமாக உடையது நமது நாடு. நமது நாட்டவருள் நூற்றுக்குத் தொண்ணூறு பேர் விவசாயிகள் என்பது கவனிக்கத்தக்கது. அத்தகைய நாட்டிற்கு விவசாய அறிவு வளர்ச்சிக்குரிய பல கருவிகள் இன்றியமையாதன. அவைகளுள் ஒன்று பத்திரிகை. மேல் நாட்டில் விவசாயத்தைப்பற்றிய பத்திரிகைகள் எண்ணில; எண்ணில. அப்பத்திரிகைகள் விவசாய வளர்ச்சிக்கெனப் புது புது முறைகளை அறிவுறுத்துகின்றன. அதனால் அந்நாட்டில் திருமகள் திருவோலக்கங் கொண்டிருக்கிறாள். விவசாயத் துறைகளைப் பண்படுத்த நமது நாட்டார் பெரிதும் முயல்வதில்லை. முன்னோர்கள் உழுத நிலத்தையே இன்னும் நம்மவர்கள் உழுதுகொண்டிருக்கிறார்கள். புது முறைகள் கண்டு செல்வம் பெருக்கும் முயற்சியில் நம்மவர்கட்கு ஊக்கம் எழுவதில்லை.

அவ்வூக்கம் நாட்டின் ஒருகோடியில் எழுவது கண்டு களிபேருவகை யுறுகிறோம். திருவாங்கூரில் தொழிலுடன் சங்கமும், சங்கத்துடன் பத்திரிகையும் எழுந்தமை நாட்டின் வளர்ச்சிக்கு ஓர் அறிகுறியாகும்.

திருவாங்கூரும் அதைச் சார்ந்த இடங்களும் ஏல விவசாயத்தில் பேர் பெற்றிருத்தல் உலகறிந்த தொன்று. அப்பாங்கரின் விளையும் ஏலம் முதலியவற்றைப் பற்றிய குறிப்புக்கள் பழந்தமிழ் நூல்களிலுமுண்டு. மேல் நாட்டு வாணிபர்கள் முதல் முதல் அவண் போந்தபோது தங்கள் நாட்டு மயக்கப் பொருளைப் பண்ட மாற்றாக ஈந்து, மலையாள நாட்டு மணங்கமழ் பொருளைப் பெற்றுச் சென்றார்கள் என்று சில புலவர்கள் பாடியிருக்கிறார்கள். ஏலம் முதலிய மணங் கமழ் பொருட்கு மலையாளம் பேர் பெற்றது என்பதை விரித்துக்கூறல் வேண்டுவதில்லை.

திருவாங்கூரிலுள்ள ஏல விவசாயிகள் தற்காலத்துக்கு வேண்டற்பாலதாய அமைப்பு முறையின் இன்றியமையாமை யுணர்ந்து, ஒரு சங்கங் கண்டு, அதன் வாயிலாக ஒரு பத்திரிகை வெளியிட முற்பட்டது போற்றற்குரியது. அவர்கட்கு நமது நன்றி யுரியதாக.

"ஏல விவசாயி" வெறும் ஏலத்தைப் பற்றியே கருத்தைச் செலுத்துவதாகத் தோன்றவில்லை. அப்பத்திரிகை ஏல விவசாயத்தில் கவலை செலுத்துவதோடு வேறு பல வாழ்வுத் துறைகளின் மீதுங் கவலை செலுத்தி வருகிறது. வாழ்விற்குரிய பல செம்பொருள்கள் "ஏல விவசாயி"யில் மிளிர்கின்றன. எமது பார்வைக்கு வந்த முதலிரண்டிதழ்கள், ஏலவிவசாயிகளுக்கு விஞ்ஞாபனம், ஏல விவசாயிகளுக்கோர் விண்ணப்பம், பத்திரிகைகளும் அவற்றின் பயனும், சங்கங்களும் அவற்றின் பயனும், புருக்பாண்ட் கம்பெனி, ஐக்கிய இயக்கம், கூட்டுறவு இயக்கம், திருவாங்கூர் ஏல விவசாயிகளின் சங்கம், விவசாயப் பழமொழிகள், தமிழரும் தாய்மொழியும், ஏலம் ஏற்றுமதி செய்யப்பட்ட விவரம், திருவாங்கூர் ஏலவிவசாயிகளின் சங்கமும், அதன் கிளைகளும் முதலிய பொருள்களை உள்ளுறையாகக் கொண்டிருக்கின்றன. இப்பொருள்களை உற்று நோக்குவோர்க்குப் பத்திரிகையின் நோக்கம் இனிதுபுலனாகும். பத்திரிகையின் முதலிதழில் பத்திரிகை நோக்கங்கள் அணியணியாக வகுக்கப்பட்டிருக்கின்றன. அவைகளின் தொகை முப்பத்தேழு. அவைகளில் வாழ்வுக்குரிய பொருளெலாஞ் செறிகின்றன.

திருவாங்கூர் ஏல விவசாயிகள் சங்கங் கண்டது பெருவினையன்று; பத்திரிகை வெளியிட முற்பட்டதும் பெருவினையன்று; பத்திரிகை நடாத்தத் தக்க ஆசிரியர் ஒருவரைத் தெரிந்தெடுத்ததே பெருவினையாகும்.

"ஏல விவசாயி"யின் முகப்பில் பொலியும் "R நாராயணசாமி, ஆசிரியர்" என்னுங் காட்சி எமக்குப் பெருமகிழ்ச்சியூட்டிற்று. திருவாளர் நாராயணசாமி செட்டியார், தேவாரம் என்னும் பதியினின்றும் வெளிப்போந்து கொண்டிருந்த "தேவாங்க மித்திரன்" என்னும் பத்திரிகாசிரியரா யிருந்து அதைத் திறம்பட நடாத்தியவர்; பன்னெடு நாளாகத் தேச சேவைசெய்து வருபவர்; பல துறைகளிலும் ஆராய்ச்சியுடையவர்; தமது ஆராய்ச்சிகளை எளிய முறையில் பிறர்க்குப் பயன்படுத்தும் ஆற்றல் வாய்ந்தவர்; நற்குணமுடையவர். சுருங்கக்கூறின் பிறர்க்குழைத்தல் என்னும் பெருந் தொண்டில் பற்றுடையார் என்று கூறலாம். அறிவும் ஆற்றலும் தகைமையும் மலர்ந்து காய்த்துக் கனிந்துள்ள திருவாளர் நாராயணசாமி செட்டியாரை ஆசிரியராகத் தெரிந்தெடுத்த ஏல விவசாய சங்கத்தார்க்குத் தமிழுலகங் கடமைப்படுவதாக. மொழியும் சமயமும் நாடும் நேரிய வழியில் வளர வேண்டுமேல் திருவாளர் நாராயணசாமி செட்டியார் போன்ற அறிஞர்கள் சேவை வேண்டற்பாலது.

திருவாளர் நாராயணசாமி செட்டியார் முதலிதழில் முகவுரை என்னுந் தலைப்பிட்டு எழுதியுள்ள கட்டுரைப் பொருட்களில் ஒளிருஞ் சில குறிப்புக்களை மட்டும் ஈண்டு எடுத்துக்காட்டுகிறோம். அவை வருமாறு:—

* * * விவசாயம், கல்வி, கைத்தொழில், வர்த்தகம், வைத்தியம், சிலகள் முதலிய சகலவித சாஸ்திரங்களில் அபிவிர்த்தி அடைந்திருப்பதே ஒரு தேசத்தின் முன்னேற்றத்திற்கு அடையாளம். அவ்வாறு அடைவதற்கு முக்கிய முதற்சாதனம் பத்திரிகைகளேயாம். ஒரு தேசமோ, சமூகமோ, பாஷையோ, கட்சியோ, மதமோ, வேறு எந்த விஷயமோ விருத்தியடைய வேண்டுமாயின், பத்திரிகைகளினாலேயே இலகுவில் முடியும் என்பதையும், அநேகம் பிரசாரகர்கள் செய்யும் வேலையை மிக்க இலகுவில், சொற்ப காலத்தில், அற்பச்செலவில் சிரமமின்றிப் பத்திரிகைகளுக்குச் செய்யும் சக்தி உண்டு என்பதையும் எவர்தான் மறுக்க முடியும்? முன்னேற்ற மடைந்திருக்கும் எத்தேசங்களிலும் பத்திரிகைகள் ஏராளமாக வெளி வருவது எவரும் பிரத்தியட்சத்தில் காணும் விஷயமாகும். பிரான்ஸ் தேசத்தில் பிச்சைக்காரர்களுக்குங் கூட பத்திரிகை பதிப்பிக்கப் படுகிறதென்று வியப்புடன் சிரிப்புடன் கூறுகின்றேன். இன்னும் பத்திரிகை உலகத்திற்கு அரசனாக விளங்கிய லார்ட் நார்த்கிளிப் அநேக பெரிய காரியங்களை இலகுவாய், சாமர்த்தியமாய்ச் செய்து முடித்தார் என்பது பத்திரிகாநுபவம் சிறிதும் பெற்ற எவருக்கும் நன்றாய்த் தெரியும். ஜெர்மன் மாஜி கெய்சர் என்ன செய்துகொண்டு ஜீவிக்கிறார்? பத்திரிகைகளுக்கு எழுதியே. மாஜி முதல் மந்திரி லாயிட் ஜார்ஜ் என்ன செய்துகொண்டு பிழைக்கிறார்? பத்திரிகைகளுக்கு எழுதியே. இந்தியா மந்திரியாயிருந்த மாண்டேகுவும் என்ன செய்து கடைசியில் வாழ்ந்தார்? பத்திரிகைகளுக்கு எழுதியே. அயல் தேசத்தில் கணக்கற்ற மனிதர்கள் பத்திரிகைத்தொழில் செய்து ஜீவிக்கிறார்கள். அங்கு ஒருவன் ஒரு நாள் உணவில்லாமல் காலம் கடத்தினாலும் பத்திரிகை படியாமல் காலம் கழிக்க விரும்பமாட்டான். பாத்திர பண்டங்கள் நமக்கு எப்படித் தேவையோ அப்படியே அமெரிக்கா, ஐரோப்பா, ஜப்பான் முதலிய தேச ஜனங்களுக்குப் பத்திரிகைகள் தேவை தேவை யென்று சொல்லத் தேவையில்லை.

* * *

முன்பு மிக்கவலமாயிருந்த ஜப்பான் தேசம் இப்பொழுது இருக்கும் நிலை யென்ன? எத்தேசத்தாரும் கௌரவிக்கு மாறு எல்லா வழிகளிலும் மிக்க மேன்மையாகவும், அது வல்லரசுகளில் ஒன்றாகவும் விளங்குகிறது. காரணம்? கண் கட்டு வித்தையல்ல, மாயமல்ல, மோசமல்ல. ஆனால் ஜப்பானியர்களின் பத்திரிகாபிமானமும் தேசாபிமானமுமேயாம். அவர்கள் தங்கள் சர்க்காரைக் கொண்டு மடமைச் செடியை ஆணிவேருடன் களைந்தெடுத்து, வெந்நீர் ஊற்றி நாசப்படுத்தினார்கள். கால் நூற்றாண்டுகளுக்கு முன் ஜப்பானில் பத்திரிகை என்ற பெயரே கிடையாதிருந்தும், இப்போது அங்குச் சுமார் 4000 பத்திரிகைகள் நடைபெறுகின்றன என்று அறிய எவருக்குத்தான் ஆச்சரியமாகவிராது? அங்குப்பிரசுரமாகும் "அஸாஹி"க்கு 21,00,000மும், "ஒஸாகா மைனிச்சி"க்கு 10,00,000மும், "டிகேஸ் கிம்போ"க்கு 400,000மும் சந்தாதாரர்கள் இருக்கின்றார்கள். இன்னும் அங்குள்ள சில பத்திரிகைகளுக்குப்பல லட்சக்கணக்கான சந்தாதாரர்கள் இருப்பார்கள் அல்லவா? 1881 ஆு-த்தில் 30,000 என் மூலதனத்துடன் (1 என் ரூ 1—8—0) ஏற்படுத்தப்பட்ட "அஸாஹி"க்கு 1922-ம் வருஷத்தில் 4,000,000 என் ஆகப்பெருகியிருக்கிறது. 50,000 என் மூலதனத்துடன் ஸ்தாபிக்கப்பட்ட "ஒஸாகா மைனிச்சி"க்கு 1925 வருடத்தில் 5,000,000 என் ஆக விருத்தியாகியிருக்கிறது என்றால், அந்நாட்டில் அப்பத்திரிகைகளின் செல்வாக்கையும் அபிவிருத்தியையும் கவனியுங்கள்.

* * *

இங்கிலாந்து அமெரிக்கா, ஜெர்மனி, பிரான்ஸ் முதலிய நாகரிக நாடுகளில் பல லட்சக்கணக்கான சந்தாதாரர்களுடைய பல பத்திரிகைகள் இருக்கின்றன. பலவித இயக்கங்களுக்கும், பல வித தொழில்களுக்கும் பல பத்திரிகைகள் உண்டு. நமது நாட்டாருக்கு, அடிமையில் அழுந்திக் கிடக்கும் நமது நாட்டாருக்கு இஃது ஒரு பெரிய பாடமாகும். பத்திரிகை யுகமாகிய இக்காலத்தில் ஒரு பாமரரும் அற்பப் பிரயத்தினத்தால் ஏற்ற அறிவாளியாகுதல் கூடும். குடிகளின் நன்மை,தீமைகளை அறிவதற்குப் பத்திரிகைகள் போன்ற சாதனம் வேறு கிடையாது. உலகானுபவம் அடைவதற்குப் பத்திரிகை வாசித்தலே ஏற்றவழி. தற்காலத்தில் ஓர் அரசாங்கம் நன்கு நடைபெறுவதற்குப்பத்திரிகைகளின் உதவி அவசியமாகத் தேவை.

பத்திரிகை வாழ்விற்கு வேண்டிய தத்துவங்களை உபதேசிப்பதால் ஆசிரியனாகவும், செவிக்கினியவை, சிந்தைக்கினியவைகளைத் தேடி ஏற்ற காலத்தில் சந்தோஷத்துடன் உதவுவதால் தாயாகவும், நற்கல்விகளைப் பருவபேதங்களுக்குத் தகுந்தவாறு பயிற்றுவதால் தந்தையாகவும், குற்றங்களைக்கூறித் திருத்தங்களைச் செய்வதால் நண்பனாகவும், உள்ளதை உள்ளபடி எடுத்துக்கூறி, துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனம் செய்வதால் நீதி மன்னனாகவும், அயலிடத்து விஷயங்களை அறிவிப்பதால் தூதனாகவும் நமக்கு விளங்குகிறது. தேசங்களின் சட்டதிட்டங்களை ஆக்குவதும், அழிப்பதும், சங்கங்களைக் கூட்டுவதும், குலைப்பதும், கலகங்களை உண்டாக்குவதும், ஒழிப்பதும், அரசாங்கங்களை அமைப்பதும், அதோகதியாய்ச் செய்வதும், இராஜாங்க உயர்தர உத்தியோகஸ்தர்களை நியமிப்பதும்,நீக்குவதும், உடன்படிக்கைகளை உறுதி செய்வதும், உடைப்பதும் பத்திரிகைகளின் வேலைகளே. பத்திரிகைகளின் பயன்களை இன்னது இன்னது என்று எழுதினால் இவ்வியாசம் இப்பொழுது இறுதியாகாது.

* * *

சுருங்கச் சொன்னால் பத்திரிகைகளின் மூலம் தான் இவ்வளவு உன்னத நிலை அடைந்திருக்கிறது தற்கால உலகம் என்று எவரும் ஒப்புக்கொள்ளாமலிருக்க முடியாது. சென்னை மாகாணத்தில்அதிக வரிக்காரர்களுடைய பத்திரிகை இங்கிலீஷில் வெளியிடப்படும் ஹிந்து பத்திரிகையேயாம். இதற்குக் கூட 10,000 சந்தாதாரர்களுக்குமேலில்லையாம். ஆங்கிலப் பத்திரிகைகளுக்குள்ள செல்வர்க்குங் கூட தமிழ் உலகில்வெளிவரும் தமிழ்ப் பத்திரிகைகளுக்கில்லையென்றால் தமிழ் நாட்டின் தேசாபிமானிக்கும், பாஷாபிமானிக்கும் எவ்வளவு வெட்கம்! அநேகர் சுதேசப் பத்திரிகைகளை வரவழைத்து வாசிப்பது கௌரவத்திற்குக் குறைவு என்று நினைக்கின்றனர். இதைப் போன்ற அறியாமை வேறில்லை. இக்காரணத்தால் தான் நம் நாட்டில் பல பத்திரிகைகள் தோன்றி ஆதரிப்பாரின்றி அழிந்தன. தமிழகத்தில் பல பத்திரிகைகள் இருப்பினும் அவைகள் உரம்பெற்று வருவதாகத் தெரியவில்லை. தமிழ் தேசத்தில் சில பத்திரிகைகளே நெருக்கடியான எந்நிலைமையையும் சரி செய்துகொண்டு முன்னிலையில் நிற்கின்றன. எந்நோக்கத்துடன் பத்திரிகை நடைபெறுகிறதோ அந்நோக்கத்துக்குரிய அனைவரும் அதனை ஆதரித்தால்தான் அது வளரும், வளரும், வளமாய் வளரும். அயல் நாடுகளில் எங்கும் பத்திரிகைகள், எதற்கும் பத்திரிகைகள் காணப்படுகின்றன.

* * *

விவசாயத்தில் ஒரு சிறிய பிரிவாகிய ஏல விவசாயத்தைப் பற்றி ஒரு தனிப் பத்திரிகை பதிப்பித்து நடத்துவது மிக்க கஷ்டமான காரியம் என்பது எனக்குத் தெளிவாகத் தோன்றினாலும், தொண்டு என் ஜீவிய நோக்கமாதலால், உழைப்பு நல்ல பள்ளிக்கூடம் என்ற பெரியோர் வாக்கியத்தைக் கவனித்து, காலக்கிரமத்தில் எல்லாம் சரியாய்ப் போய்விடும் என்று ஆழ்ந்து எண்ணி, கொஞ்ச காலம் ஒரு சமூகப் பத்திரிகை நடத்தி, பலபத்திராதிபர்களிடம் சில காலம் பழகி, பத்திரிகை நடத்த அற்ப அநுபவம் அடைந்திருக்கிறபடியால், சங்கத்தின் அங்கத்தினர்களாகிய தங்களுடைய மேலான ஆதரவை நம்பியே, நான் இவ்வூழியத்தை, இப்பெரும் பாரத்தைச் சிரமேற்கொள்கிறேன். பத்திரிகையின் பாடு என்னுடையது, பயன் தங்களுடையது; தூற்றம் என்னுடையது, ஏற்றம் தங்களுடையது; பத்திரிகையின் இகழ்ச்சி என்னுடையது, புகழ்ச்சி தங்களுடையது; பத்திரிகையின் துன்பம் என்னுடையது, இன்பம் தங்களுடையது; பத்திரிகையின் தோல்வி என்னுடையது, வெற்றி தங்களுடையது. ஒரு வார்த்தையில் சொன்னால் பத்திரிகையின் வேலை என்னுடையது, பத்திரிகை தங்களுடையது. தங்கள் சங்கத்தின் சிறிது பணம் பத்திரிகை வடிவமாக மாறிப் பாரெங்கும் மணக்கட்டும். * * * *

இவ்வாறு எளிய நடையில் கருத்துக்களை வெளியிடும் அறிவாற்றலுடைய ஒருவரை ஆசிரியராகக் கொண்டதும், வளர்ச்சிக்குரிய நல்லமைப்புக்களைக் கொண்டதுமாகிய "ஏல விவசாயி" யை ஆதரிக்க வேண்டுமென்று பொதுவாகத் தமிழ் மக்கட்கும் சிறப்பாக விவசாயிகட்கும் சொல்லவும் வேண்டுமோ? சந்தா விவரம்: அங்கத்தினர் அல்லாதார்க்கு ரூ. 2. அயல் நாடுகளுக்கு ரூ. 2-8-0. விலாசம்: மானேஜர், "ஏல விவசாயி", உத்தமபாளையம், மதுரை ஜில்லா.

# இடியேறு

## கதர் நிதி

மலாய் நாட்டில் செய்கோன் நகரில் வதியும் நமது அன்பர்கள் கரு. வேங்கடாசலஞ் செட்டியார் அவர்களும், செ. அள. இராமசாமி செட்டியார் அவர்களும் காந்தி கதர் நிதிக்கு 363 வெள்ளி அதாவது 510 ரூபா சேகரித்து, அடிகள் சென்னைக்கு வரும்போது அவரிடம் சமர்ப்பிக்குமாறு நமக்கு உண்டி அனுப்பி வைத்திருக்கிறார்கள். அவர்களுடைய அன்புளத்தையும், அரிய தொண்டையும் நாம் மனமாரப் போற்றுகிறோம். பணங் கொடுத்த அன்பர்களின் விலாசங்களும், தொகை விவரமும் அடுத்த பரலில் வெளியிடப்படும்.

## அன்சாரி அறிக்கை

வரும் சென்னைக் காங்கிரஸுக்குத் தலைவராவார் என எதிர்பார்க்கப்படும் டாக்டர் அன்சாரி, அப்பதவிக்குத் தாம் முடிவாகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு முன்னால் தமது கொள்கையை நாட்டார் முன்பு கிளத்தும் பொருட்டு விடுத்துள்ள அறிக்கையின் பெரும் பகுதியை மற்றோரிடத்தில்வெளியிட்டிருக்கிறோம்.சென்ற பரலில் "உய்வில்லை" என்ற தலைப்பின் கீழ் நாம் எழுதிய உபதலையங்கத்தில்,டாக்டர் அன்சாரியின் கருத்துக்கள் என்று நாம் குறிப்பிட்டவற்றுக்கும், அறிக்கையில் காணும் கருத்துக்களுக்கும் வேற்றுமை ஏதுமில்லை. எனவே, அவ்வறிக்கை குறித்து நாம் புதிதாக அதிகம் எழுத வேண்டுவதில்லை. இரண்டொன்று கூறுதலே போதும். டாக்டர் அன்சாரியின் உள்ளம் பூரண ஒத்துழையாமையில் பதிந்து கிடப்பது நமக்குக் களிபேருவகை அளிக்கிறது. சென்ற நான்கு ஆண்டுகளாகக் காங்கிரஸ் திட்டம் எதுவும் நிறைவேற்றி வைக்கப்படவில்லை யென்றும், சுயராஜ்யக்கட்சியார் "ஒத்துழையாமை" "முட்டுக்கட்டை" என்று முழக்கிக்கொண்டு உண்மையில் அதிகாரவர்க்கத்துடன் ஒத்துழைத்து வந்திருக்கிறார்களென்றும், அவர்கள் ஒத்துழையாமை வேடம் பூண்டு நாட்டையும் தங்களையும் வஞ்சித்துக்கொள்ளுதல் தகாதென்றும், அவர்கள் தம்மைப்போல் ஒத்துழையாதார் ஆக முடியாதேனின் தாங்கள் ஒத்துழைப்பாளரே, என்பதையேனும் வெளிப்படையாக ஒப்புக்கொண்டு பதவி ஏற்று ஒத்துழைப்பால் பெறக்கூடிய சிறு நன்மைகளைப் பெறவேண்டுமென்றும் அவர் கூறுவனவற்றை நாம் முழுதும் ஆதரிக்கிறோம். ஆனால் காங்கிரஸுக்கு டாக்டர் அன்சாரி காட்டும் வழி என்ன? அறிக்கையில் இது தெளிவாகப் புலனாகவில்லை. எனினும் அறிக்கையின் போக்கிலிருந்து காங்கிரஸைப் பதவிப் படுகுழியில் வீழ்த்துவதே டாக்டர் அன்சாரியின் உள்ளக்கிடக்கை என்று தோன்றுகிறது. இங்கே தான் டாக்டர் அன்சாரியின் கருத்திலிருந்து நாம் முற்றும் மாறுபடுகிறோம்.

## பிழைபாடு

தீவிர ஒத்துழையாமையில் உறுதிகொண்ட டாக்டர் அன்சாரி தமது தலைமையின் கீழ் காங்கிரஸ் மகா சபையைப் பதவிப் படுகுழியில் வீழ்த்த நினைப்பதின் காரணம் என்ன? தேச நிலை குறித்து அவர் செய்துள்ள ஆராய்ச்சியில் ஒரு சிறு தவறு நிகழ்ந்திருப்பதேயாகும் காங்கிரஸ் மகாசபையில் தற்போது பெரும்பான்மையோரா யிருப்பவர் தம் கருத்துக்கு மாறுபட்டவர்; அதாவது ஒத்துழைப்பாளர் என்று டாக்டர் அன்சாரி கருதுகிறார். ஆதலின் நேர்மையுளங்கொண்ட டாக்டர் அன்சாரி, காங்கிரஸ் பெரும்பான்மையோர்வழியேநடக்க வேண்டுமாதலால் பதவி ஏற்குந் திட்டத்தை ஒப்புக்கொள்ள வேண்டுமென முடிவு செய்திருக்கிறார். இக்கருத்து பிழைபாடுள்ளதென்பதைப் பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறோம். காங்கிரஸ் தலைவர்களையே காங்கிரஸ் மகா சபை என்று டாக்டர் அன்சாரி கருதிவிட்டார் போலும்! தற்போதைய காங்கிரஸ் தலைவர்களில் பெரும்பான்மையோர் ஒத்துழைப்பாளர் என்பது உண்மையே.ஆனால்தலைவர்கள்லாத சாதாரண காங்கிரஸ்காரரில் மிகப்பெரும்பான்மையோர் ஒத்துழையாதாரேயாவர்.பொதுவாக தேச மக்களின் உள்ளம் ஒத்துழையாமையில் பதிந்து கிடப்பது உறுதி. சுயராஜ்யக் கட்சிக்காரர் இதுகாறும் "சட்டசபைக்குள் ஒத்துழையாமை" "முட்டுக் கட்டை" என்று முழக்கி வந்ததினாலேயே அவர்களைப் பொதுவாக தேச மக்களும், சிறப்பாகக் காங்கிரஸ்காரரும் ஆதரித்து வந்தனர். இப்போது அவர்கள் உண்மை நோக்கம் ஒத்துழைப்பு என்பது வெளியாக ஆக தேச மக்கள் அவர்களைப் புறக்கணிக்கத் தொடங்கியிருக்கின்றனர்.

## தலைவர் வேண்டும்

டாக்டர் அன்சாரி என்செயல் வேண்டும்? சுயராஜ்யக் கட்சியாரை நோக்கி "நீங்கள் இதுகாறும் உங்கள் திட்டங்களில் எதையும் நிறைவேற்றி வைத்தீர்களில்லை. நான்கு ஆண்டு காங்கிரஸை உங்கள் கையில்கொடுத்துப் பார்த்தாகிவிட்டது. எனவே, இனி ஒன்று நீங்கள் சட்டசபைகளை விடுத்து வந்து பூரண ஒத்துழையாமையைக் கைக்கொள்ளுங்கள்; அல்லது காங்கிரஸை விட்டு வெளியே போந்து மிதவாதிகள் முதலியோரைப் போல் சட்டசபைகளையும், மந்திரி பதவிகளையும் கட்டிக்கொண்டு அழுங்கள்" என்று சொல்லிவிடவேண்டும். பின்னர், காங்கிரஸ் மகா சபை மூலம் தேசத்தை ஒத்துழையாமைக்குச் சித்தமாக்க முயலுதல் வேண்டும். நாம் முன்னமே கூறியதுபோல் தேசமக்களின் உள்ளம் ஒத்துழையாமை மீதே உறுதி கொண்டு நிற்கிறது. அவர்களை நடத்துவதற்கு ஒத்துழையாத் தலைவர் ஒருவரே தேவை. 'எனக்கு ஆற்றல் இருப்பின் தேசத்தில் ஒத்துழையாமையை மீண்டும் தொடங்குவேன்' என்று டாக்டர் அன்சாரி ஓரிடத்தில் கூறுகிறார். அவர் தமக்கு ஆற்றல் இல்லையென்று தாமே ஏன் எண்ணிக்கொள்ளல் வேண்டும்? டாக்டர் அன்சாரி தாம் காங்கிரஸ் தலைவராயிருக்கும் ஓராண்டில் தேசத்தை ஒத்துழையாமைக்குச் சித்தப்படுத்திக் காந்தியடிகளிடம் ஒப்புவித்து மீண்டும் ஒத்துழையாமை இயக்கத்தை நடத்தும்படி கேட்டுக்கொள்ளவேண்டுமென்பது நமது விருப்பம். அவ்விருப்பம் நிறைவேறுதல் ஆண்டவன் திருவருளைப் பொறுத்திருக்கிறது.

## கதர் விதி

சமூக ஒற்றுமை குறித்து டாக்டர் அன்சாரி வலியுறுத்திக் கூறியிருப்பவை நமக்கு முற்றும் உடன்பாடு. அவரது தலைமையின் கீழ் நாட்டில் நிலையான ஒற்றுமை யேற்பட வேண்டுமென விரும்புகிறோம். அவ்வொற்றுமை அடைதற்குச் சிறந்த உபாயம் ஒத்துழையாமையை உயிர்ப்பிப்பதே யாகும். 1921-ம் ஆண்டில் "ரங்கீலாரசூல்", "ரிஸாலாவர்த்தமான்" போன்ற வழக்குகளும் சிவாஜி அவதாறு போன்றவைகளும் நிகழ்ந்தனவா? அவ்வாண்டில் ஹிந்து முஸ்லிம் வேற்றுமைப் பேச்சே தலை காட்டவில்லை யென்பது கவனிக்கற்பாற்று. காங்கிரஸ்காரர் வழக்கமாகக் கதர் அணியவேண்டுமென்ற விதியை எடுத்துவிட வேண்டுமென டாக்டர் அன்சாரி கூறுவதை நாம் ஏற்க முடியாது. காங்கிரஸைப் பட்டம் பதவி ஏற்கும் மிதவாதக் காங்கிரஸாக மாற்றுவதாயின், டாக்டர் அன்சாரியின் யோசனை அவசியமாயிருக்கலாம். அவ்வாறின்றி, நாம் காங்கிரஸைப் பூரண ஒத்துழையாமைக் காங்கிரஸாக ஆக்க விரும்புகிறோமாதலின் கதர் விதி இருத்தல் வேண்டுமெனக் கருதுகிறோம்.

## குஜராத்துக்குச் சுயராஜ்யம்

மனிதர்களுக்குக் கஷ்டகாலம் வரும்போதே அவர்களுடைய உண்மைப் பெருமை வெளியாகும் என்பார்கள். குஜராத் மாகாணத்தில் தோன்றிய பெரும் வெள்ளம் அம்மாகாணவாசிகளின் பெருமையை நன்கு நிரூபித்து விட்டது. சமீப காலத்தில் இந்தியாவில் ஏற்பட்ட எந்த வெள்ளத்தினாலும் குஜராத்தில் விளைந்துள்ள அளவு சேதம் விளைந்ததில்லையென்று தெரிகிறது. இத்தகைய விபத்து நேர்ந்த காலத்தில் குஜராத் காங்கிரஸ்காரர் தங்கள் அருந்தலைவர் ஸ்ரீ வல்லபாய் படேலின் தலைமையில் கட்டுப்பாட்டுடன் கஷ்ட நிவாரண வேலை செய்து "குஜராத் சுயராஜ்யம் பெற்றுவிட்டது" என்று காந்தியடிகள் வியப்புற்றுக் கூறுமாறு செய்துகொண்டனர். இக்காரணத்தினாலேயே பம்பாய் அரசாங்கத்தாரும் அங்குக் காங்கிரஸின் தலைமையை ஏற்றுக்கொள்ள நேர்ந்திருக்கிறது. அவர்கள் காங்கிரஸ் ஸ்தாபனத்தின் மூலமாகக் கஷ்ட நிவாரண வேலை செய்ய முன் வந்திருக்கிறார்கள். "குஜராத்தில் எங்கள் தலைவர் வல்லபாய் படேல்" என்று மகாத்மா எழுதுகிறார். ஸ்ரீ படேலிடம் தமக்குப் பூரண நம்பிக்கை இருப்பதாலும், தாம் குஜராத்துக்கு வருதல் அவசியமில்லை என்று அவர் அபிப்பிராயப்பட்டதாலும், அவரால் செய்ய முடியாததெதையும் தாம் போய்ச் செய்யப் போவதில்லையாதலாலும் தாம் குஜராத்துக்குச் செல்லவில்லையென்றும் அடிகள் எழுதியுள்ளார். தேசத்துக்கு ஒரு மகாத்மாவை அளித்துத் தங்களுக்கு ஒரு படேலையும் பெற்ற குஜராத்தியரை நாம் வாழ்த்துகிறோம். ஏழைத் தமிழர்களால் குஜராத்துக்குப் பேருதவி ஏதும் செய்ய முடியாதாயினும், ஸ்ரீ இராமபிரானின் பாலத்துக்கு அணில் உதவியதுபோல் தங்களால் இயன்ற சிறு உதவியை அனுப்பிவைப்பார்களென்று நம்புகிறோம்.

## மந்திரியின் யுக்தி

கதர்ப்பற்றுள்ளவரென்று கருதப்படும் முதன் மந்திரி டாக்டர் சுப்பராயன், உத்தியோகஸ்தர்கள் கதர் நிதிக்குப் பணங் கொடுக்கலாகாதென்னும் உத்தரவை ஆதரித்து யுக்தி வாதம் செய்திருப்பது நமக்குப்பெரும் வியப்பையளிக்கிறது. சர்க்கா சங்கம் காங்கிரஸ் தொடர்புடையதாதலால் அதற்கு அரசாங்க உத்தியோகஸ்தர்கள் பணங் கொடுக்கலாமென்று அநுமதித்தால், ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களுக்கும் ஐரோப்பிய சங்கத்துக்குப் பண உதவி செய்ய அநுமதி கொடுக்கும்படி நேரிடுமாம்! ஐரோப்பியச் சங்கத்தார் ஏழை ஐரோப்பியர்களின் பொருளாதார முன்னேற்றத்துக்காக ஒரு தனி நிதி திரட்டுவோர்களாயின், அதற்கு ஐரோப்பிய உத்தியோகஸ்தர்கள் பணந் தருவதை நாம் ஆட்சேபிக்க மாட்டோமென்று மந்திரிக்குத் தெரிவித்துக்கொள்கிறோம். பம்பாய் அரசாங்கத்தார் குஜராத்தில் வெள்ளக்கஷ்ட நிவாரண வேலையைக் காங்கிரஸ் கமிட்டி மூலமாய் நடத்தி வருகிறார்களென்பதையும் டாக்டர் சுப்பராயன் கவனித்தல் வேண்டும். அதிகார வர்க்கத்துடன் போராடத் தமக்கு ஆற்றல் இல்லையென்றால் அதை வெளிப்படையாகச் சொல்லிவிடலாமே? யுக்தி வாதம் ஏற்றுக்கு?

# காந்தியடிகள்

## உண்மையோடியைந்த வாழ்வு

### பாகம் 4. அத்தியாயம் 13.

### "இண்டியன் ஒபீனியன்"

நான் நெருங்கிப் பழகிய மற்ற ஐரோப்பியர்களைப் பற்றிச் சொல்வதற்கு முன்னால் இரண்டு, மூன்று முக்கிய விஷயங்களைப் பற்றிக் கூற வேண்டியிருக்கிறது. எனினும் அவர்களில் ஒருவரைப்பற்றி மட்டும் இங்கேயேசொல்லி விடுதல்அவசிய மாகும்.மிஸ் டிக் என்னும் பெண்மணியை என் உதவிக்கு அமர்த்திக் கொண்டது போதவில்லை. இன்னும் யாரேனும் உதவிக்கு அவசியமாயிருந்தது. முன் அத்தியாயங்களில் மிஸ்டர் ரிச் என்பவரைப்பற்றிக் குறிப்பிட்டிருக்கிறேன். அவரை எனக்கு நன்றாகத் தெரியும். அவர் ஒரு வியாபாரக் கம்பெனியின் மானேஜராக இருந்தார். கம்பெனியை விட்டு நீங்கி, என் கீழ்வக்கீல் வேலைக்குத்தகுதிசெய்து கொள்ளலாமென்று யோசனை சொன்னேன். அதை அவர் ஒப்புக்கொண்டு என் வேலையைப் பெரிதும் இலகுவாக்கினார்.

ஏறக்குறைய இக்காலத்தில்ஸ்ரீ மான் மதன்ஜித் என்னிடம்வந்து, "இண்டியன் ஒபீனியன்" பத்திரிகை தொடங்கும் யோசனையைக் கிளத்தி என் புத்திமதியைக்கேட்டார். அவர் ஏற்கனவே அச்சுக்கூடம் ஒன்று வைத்து நடத்திக்கொண்டிருந்தார். அவரது யோசனையை நான் அங்கீகரிக்கவே பத்திரிகை 1904-ம் ஆண்டில் தொடங்கப்பட்டது. ஸ்ரீமான் மனுசுக்லல் நஸார் முதலாவது பத்திரிகாசிரியரானார். ஆனால் வேலை முழுதும் என் தலையிலேயே விடிந்தது. அநேகமாக நானே பத்திரிகையை நடத்தி வரவேண்டியதாயிற்று. ஸ்ரீ மனுசுக்லல் நஸாரால் பத்திரிகையை நடத்த முடியாதென்பதில்லை. இந்தியாவில் அவர் பத்திரிகைத் தொழிலில் நிரம்ப ஈடுபட்டு அநுபவம் பெற்றவர். ஆனால் நான் இருக்கும்போது, சிக்கலான தென்னாப்பிரிக்கா பிரச்னைகளைக்குறித்து அவர் எழுத முன் வருவதேயில்லை. என்னுடைய விவேகத்தில் அவருக்குப் பூரண நம்பிக்கை யிருந்தபடியால் தலையங்கப் பத்திகளின் பொறுப்பு முழுவதையும் என் தலைமீதே சுமத்திவிட்டார். இன்றுவரை அப்பத்திரிகை வாரப் பதிப்பாகவே இருந்து வருகிறது. ஆரம்பத்தில் குஜராத்தி, ஹிந்தி, தமிழ், ஆங்கிலம் என்னும் நான்கு மொழிகளிலும் வெளியிடப்பட்டு வந்தது. ஆனால் தமிழ், ஹிந்தி பகுதிகள் வெறும் ஏமாற்றும் வித்தையேயன்றி வேறில்லையென்று கண்டேன். அவை எந்நோக்கத்துடன் வெளியிடப்பட்டனவோ அந்நோக்கம் பூர்த்தியாவதில்லை. அப்படியிருந்தும் அவற்றைத் தொடர்ந்து நடத்துவதில் ஓரளவு மோசம் ஏற்படுகிறதென்று தோன்றிற்று. எனவே அவற்றை நிறுத்திய பிறகு தான் என் மனதிலிருந்த பாரம் நீங்கிற்று.

### "பணத்தைக் கொட்டினேன்"

இப்பத்திரிகையில் பணம் ஏதாவது போட வேண்டியிருக்குமென்று நான் எண்ணவேயில்லை. ஆனால் விரைவிலேயே பண உதவியின்றி அது நடைபெற இயலாதென்று விளங்கிவிட்டது. பெயரளவில் நான் "இண்டியன் ஒபீனியன்" ஆசிரியன் அல்லனாயினும், அதை நடத்தும் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருப்பவன் நானே யென்று இந்தியர், ஐரோப்பியர் எல்லாரும் அறிந்திருந்தனர். அப்பத்திரிகை ஆரம்பிக்கப்படாமலே இருந்திருந்தால் எவ்வித தீங்கும் நேர்ந்திராது. ஆனால் தொடங்கிய பின்னர் அதை நிறுத்துவதாயின் பொருள் நஷ்டமும் அவமானமும் ஏற்படுவது நிச்சயம். ஆதலின் என்னுடைய சொந்தப் பணத்தை அதில் கொட்டிக் கொண்டிருந்தேன். கடைசியில் நான் மீத்தபணத்தை யெல்லாம் அதிலேயே போடும்படியும் ஆயிற்று. மாதாமாதம் 85 பவுன் பத்திரிகைக்குக் கொடுக்க வேண்டியிருந்த காலம் எனக்கு நினைவிருக்கிறது.

இவ்வளவு வருஷங்களுக்குப் பின்னர் இப்போது எண்ணிப் பார்க்கையில் மேற்படி பத்திரிகை இந்திய சமூகத்துக்குச் சிறந்த ஊழியம் செய்திருப்பதாகவே கருதுகிறேன். அது என்னால் நடத்தப்பட்டுவந்த வரை, பத்திரிகையில் அவ்வப்போது தோன்றிய மாறுதல்கள் என்னுடைய வாழ்க்கையில் மாறுதல்களுக்கு அறிகுறியாயிருந்தவந்தன. இன்று "நவஜீவ"னும் "எங் இந்தியா"வும் உள்ளதுபோல் அக்காலத்தில் "இண்டியன் ஒபீனியன்" என் வாழ்க்கையின் ஒருபகுதிக்குக் கண்ணாடிபோல்இருந்து வந்தது. வாரந்தவறாமல் என் உள்ளத்திலிருந்துபொங்கிய உணர்ச்சிகளை அதன் பத்திகளிலே வெளியிட்டுவந்தேன். சத்தியாக்கிரஹ தத்துவங்களையும், அநுஷ்டானத்தையும் நான் அறிந்திருந்த வண்ணம் விளக்கிக் காட்டி வந்தேன். பத்துவருஷகாலம், அதாவது 1914-ம் ஆண்டுவரையில், சிறைச்சாலைக்குள் எனக்குக் கட்டாய ஓய்வு கொடுத்த காலங்களில்லாமல், "இண்டியன் ஒபீனியன்" பத்திரிகையின் ஓர் இதழாவது என்னுடைய கட்டுரையின்றி வெளி வந்ததில்லை யென்று சொல்லிவிடலாம்.

### ஆசிரியரும் வாசகர்களும்

அக்கட்டுரைகளில் ஒரு வார்த்தையேனும் யோசனையின்றி எழுதியதாகவாவது, வேண்டுமென்று மிகைப்படுத்தியோ பிறரை மகிழ்விப்பதற்காகவோ எழுதியதாகவாவது எனக்கு ஞாபகமில்லை. உண்மையில் அப்பத்திரிகை தன்னடக்கத்தில் பயிற்சிபெற எனக்கு ஓர் அரியசாதனமா யிருந்தது. எனது நண்பர்களுக்கோ அஃது என் எண்ணங்களை அவ்வப்போது அறிந்துகொள்வதற்குரிய சாதனமாயிற்று. மாறுபட்ட கருத்துடையவர்களுக்கும் அதில் ஆட்சேபிக்கத்தக்கவை அதிகம் அகப்படுவதில்லை. உண்மையில், "இண்டியன் ஒபீனிய"னின் நேர்மைப்போக்கானது எதிரிகளையும் தங்கள் பேனாவை இறுக்கிப்பிடித்து எழுதும்படி செய்தது என்பதை நான் அறிவேன். "இண்டியன் ஒபீனியன்" இன்றிச் சத்தியாக்கிரஹம் அநேகமாகச் சாத்தியமாயிருந்திராது. சத்தியாக்கிரஹ இயக்கத்தின் நம்பத்தகுந்த விவரங்களுக்கும், தென்னாப்பிரிக்கா இந்தியர்களின் உண்மை நிலையை அறிந்து கொள்வதற்கும் வாசகர்கள் அப்பத்திரிகையின் வெளியீட்டை ஆவலுடன் எதிர்நோக்கலாயினர். எனக்கு அது, மனித இயற்கையை அதன் எல்லா அம்சங்களிலும் படித்தறிவதற்கும் ஒரு சாதனமாயிருந்தது. பத்திரிகாசிரியரையும் வாசகர்களையும்சேர்த்துப் பிணைக்கும் தூய்மைபொருந்தியதொரு தளையை ஏற்படுத்துதல் என்நோக்கமாயிருந்தபடியால், நிருபர்களின் இதய அந்தரங்க உணர்ச்சிகளை உள்ளுறையாகக் கொண்ட கடிதங்கள் வந்து குவிந்துகொண்டேயிருந்தன. அவை, எழுதியவரின் மனோநிலையையொட்டி, நட்புரிமை கொண்டனவாகவோ, குறைகூறுவனவாகவோ, கோபத்துடன் கூடியனவாகவோ இருக்கும். இவ்வளவு கடிதங்களையும்படித்து,சிந்தித்துப்பதில் எழுதுவது எனக்குச் சிறந்த கல்விப் பயிற்சியாக இருந்தது. சமூகம் என்னுடன் சேர்ந்து எண்ணிய எண்ணங்கள் எல்லாம் இக்கடிதங்களில் தெரியவந்தன. பத்திரிகாசிரியரின் பொறுப்பை அவை மூலம் நான் கண்டறிந்து கொண்டேன். அப்பத்திரிகையின் மூலம் எனக்கு இந்திய சமூகத்தின்மீது ஏற்பட்ட செல்வாக்கானது, பிற்காலத்தில் நடந்த நேர்ந்த இயக்கத்தைச் சாத்தியமாகவும், கௌரவமுடையதாகவும், வெற்றி தருவதாகவும் ஆக்கிற்று.

### பத்திரிகை இலட்சியம்

"இண்டியன் ஒபீனியன்" தொடங்கப்பட்ட முதல் மாதத்திலேயே, பத்திரிகைத் தொழிலின் ஒரே இலட்சியம் பொதுஜன ஊழியமாகவே இருத்தல்வேண்டுமென உணர்ந்தேன். பத்திரிகைகள் மிக வலிமை பொருந்தியதொரு ஸ்தாபனம். ஆனால் கரையை உடைத்துக் கொண்டு கிளம்பிய பிரவாகம் நாட்டையெல்லாம் மூழ்கடித்துப் பயிரைப் பாழாக்குவது போல், கட்டுக் குட்படாத பேனாவும் அழிவு வேலைக்கே பயன்படுகிறது. ஆனால் கட்டுப்பாடு வெளியிலிருந்து ஏற்படுவதானால், கட்டுப்பாடே இல்லாதிருப்பதைவிட அது தீமை பயப்பதாகும். உள்ளிருந்து ஏற்படும் கட்டுப்பாடே நன்மைபயப்பது. இஃது உண்மையென்றால், தற்போது உலகில் உள்ள பத்திரிகைகளில் இப்பரீட்சையில் தேறக் கூடியவை எவ்வளவு சிலவாக இருக்கும்? உபயோகமற்ற பத்திரிகைகளை யார் நிறுத்துவது? உபயோக முள்ளவை, உபயோகமில்லாதவை என்று முடிவு செய்வது யார்? நன்மையையும் தீமையையும் போல் பயனுள்ள பத்திரிகைகளும் பயனில்லாப் பத்திரிகைகளும் இருக்கவே செய்யும். மனிதன் தன் அறிவினால் ஆராய்ந்து பயனுள்ளதைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும்.

# கலம்பகம்

ஐரோப்பாவுக்குச் சென்றிருந்த லாலா லஜபதிராய் சென்ற 19௳ பம்பாய் வந்து சேர்ந்தார்.

o o o

மைசூர் சமஸ்தானத்திலுள்ள லம்பாடி சாதியார் மகாத்மா காந்திக்கு ஓர் உபசார பத்திரமும் கதர் நிதிக்கு ரூபா 50ம் கொடுத்தார்களாம்.

o o o

சிவநேரியில் சிவாஜி பிறந்த வீட்டிலே சிவாஜியின் தாயாருக்கு ஒரு சிலை ஏற்படுத்த வேண்டுமென்று பூனா நகரத்து மாதர்கள் தீர்மானித்திருக்கிறார்கள்.

o o o

சேலம் செவ்வாய்ப் பேட்டையில் சமீபத்தில் நடந்த மாட்டுச் சந்தைக்கு வேளைக்குப் பன்னிரண்டு படி பால் கறக்கக்கூடிய பசு ஒன்று வந்திருந்ததாம்.

o o o

கல்கத்தாவில் இரு தந்தி குமாஸ்தாக்கள் ஒரு தந்தி சமாசாரத்தை மூன்றுமணி தாமதமாக ஒரு மார்வாரிக்கு அறிவித்தமைக்காகக் குற்றஞ் சாட்டப்பட்டிருக்கின்றனர்.

o o o

கல்கத்தா டைமண்டு ஹார்பரில் மதுக்கடை வைத்திருந்தவர் ஓரிரவு கடையில் தூங்கிக் கொண்டிருந்தபோது தலைவேறு உடல்வேறாக வெட்டப்பட்டுக் கிடந்தாராம்.

o o o

மத்திய மாகாணத்தில் பாடபுத்தகங்களில் லோகமான்ய திலகரைப்பற்றிய குறிப்புகள் கூடா என்று ஓர் உத்தரவு இருந்தது. அவ்வுத்தரவைத் தற்போதுள்ள கல்விமந்திரி ரத்துசெய்து விட்டார்.

o o o

குஜராத் கத்தியவார் வெள்ளக் கஷ்ட நிவாரணத்துக்காக இந்திய சட்டசபை அக்கிராசனர் ஸ்ரீ வி. ஜே. படேல் தம்முடைய சம்பளத்திலிருந்து சேமித்தபணத்திலிருந்து 10,000 ரூபா கொடுத்தார்.

o o o

கொச்சி சமஸ்தானத்திலுள்ள தாழ்த்தப்பட்டவர்களை முன்னேற்று வதற்காகக் கொச்சி தர்பாரால் ஒரு திட்டம் தயாரிக்கப் பட்டிருக்கிறதாம். இதற்கென ஒரு புதிய இலாகாவும் ஏற்பட்டிருக்கிறதாம்.

o o o

சென்ற வாரத்தில் கோயமுத்தூரை அடுத்த போத்தனூரில் ஒரு நாவிதன் அளவுக்கு மிஞ்சிக் குடித்துவிட்டுக் கர்ப்பிணியாயிருந்த தனது மனைவியைக் கத்தியால் குத்திக் கொன்று விட்டானாம்.

o o o

பம்பாய் ஆலைகளுக்குப் பாதுகாப்பு அளிப்பதற்காக வெளிநாட்டு நூல் இறக்குமதிக்கு மட்டும் சிறிது இறக்குமதி வரியை உயர்த்த அரசாங்கம் தீர்மானித்திருக்கிறது. ஆலைச் சொந்தக்காரர்களுக்கு இது திருப்தி தரவில்லை.

o o o

கொச்சியைச் சேர்ந்த திருவம்பாடியில் விசுவகுல பிராமண மாமிதாருத்திக்கு, இரத்தம்போன்ற சிவந்த நிறத்துடனும் கருத்தடர்ந்த ரோமத்துடனும் 15 அங்குல நீளமுடையதாகக் கண்டோர் அஞ்சுந் தோற்றத்துடன் ஒரு குழந்தை இறந்து பிறந்ததாம்.

o o o

பூனாவில் வான்ரீரிக் கருகே ஓர் அரசமரத்தடியில் இருந்துகொண்டிருந்த ஜேம்ஸ் பிராண்டன் என்ற அமெரிக்கச் சாமியாரை ஆயுதபாணிகளான சில திருடர்கள் அடித்து வருத்திவிட்டு அவரிடம் இருந்த சுமார் நாற்பது ரூபாவையும் பிடுங்கிக் கொண்டுபோய் விட்டார்கள்.

o o o

கராச்சி நகர சபையார் குறைந்த சம்பளம் பெறும் நகரசபை ஊழியர்களுக்கென வீடொன்றுக்கு ஆயிரம் ரூபா செலவிட்டு 1,600 வீடுகள் கட்டவும் அரசாங்கத்திடம் 29 லட்ச ரூபா கடன் வாங்கி உயர்ந்த ஜல சப்ளை திட்டத்தை நடத்திவைக்கவும் தீர்மானித்திருக்கின்றனர்.

o o o

பரோடா வெள்ளக்கஷ்ட நிவர்த்தி நிதிக்காக இப்பொழுது ஐரோப்பாவிலுள்ள பரோடா மகாராஜா ஒரு லட்ச ரூபா அனுப்பி யிருக்கிறார். வெள்ளத்தால் கஷ்ட மடைந்த தமது குடி மக்களுக்குத் துணை புரியுமாறு மகாராஜா அக்டோபர் மாதத்தில் வருகிறாராம்.

o o o

அயர்லாந்து பார்லிமெண்டில் காஸ்கிரேவ் அரசாங்கத்தின் மீது கொண்டுவரப் பட்ட நம்பிக்கையில்லாத் தீர்மானத்துக்குச் சாதகமாகவும் பாதகமாகவும் 71 வாக்குகள்கிடைத்தன. அக்கிராசனர் தமது வாக்கை விரோதமாகக் கொடுத்து அரசாங்கத்தை ஒரு மயிரிழையளவினால் காப்பாற்றினார்.

o o o

மிஸ்மேயோவின் பொய்க் கூற்றுக்களைக் கண்டித்து, தற்போது இங்கிலாந்திலுள்ள ஸர் தேஜ்பகதூர் சப்ரூ, ஸர் சிமன்லால் சேதால்வட், ஸர் அதுல் சந்திர சட்டர்ஜி முதலிய பிரபல இந்தியர்கள் எழுதிய மறுப்புக் கடிதத்தைப் பிரசுரிக்க லண்டன் "டைம்ஸ்" பத்திரிகை மறுத்துவிட்டதாம்.

o o o

இந்தியாவில் மிகத்துணிச்சலான கொள்ளைக்கூட்டத்தைச் சேர்ந்த குன்வர் பார்வித்துசிங் என்பான் டேடியா போலீசாரால் சூழ்ந்து கொள்ளப்பட்டபோது அவன் தன்னைச் சேர்ந்த பலரைச் சுட்டுக்கொன்று, போலீசாரையும் பிறரையுந் தாக்கிய பிறகு தற்கொலை செய்து கொண்டு இறந்தானாம்.

o o o

வங்காள அவசரச்சட்டக் கைதியாயிருந்து விடுதலைபெற்ற ஸ்ரீமான் எஸ். ஸி. மித்ரா 18௳ ஆரம்பமான இந்திய சட்டசபைக் கூட்டத்துக்குக் கதருடை தரித்து வந்திருந்தாராம். இவர் இராஜவிசுவாசப் பிரமாணம் செய்ய எழுந்தபோது ஸ்ரீ அமரநாத தத்தர் "வந்தே மாதரம்" கோஷம் செய்தாராம்.

o o o

பிறந்தது முதல் 21 வயதுவரை ஊமையாயிருந்த மயோரி வகுப்பைச் சேர்ந்த ஒருவன் இங்கிலாந்தில் சென்ற வாரம் ரக்பி கால்பந்து விளையாட்டிற் சேர்ந்து ஆடிக் கொண்டிருக்கையில் ஆட்டம் முடிய ஓர் உற்சாகமான தருணம் வருகையில் ஊத்துக் கூப்பிட்டானாம். அவன் அது முதல் பேசும் சக்தி பெற்றுப் பேசி வருகிறானாம்.

o o o

சென்னை மலைச்சாலையிலுள்ள நீல் உருவச்சிலை தேசத்தாரை அவமதிப்பதாயும் கிளர்ச்சிக்குக் காரணமாயுமிருப்பதால் அதை அப்புறப்படுத்திவிட்டு அந்தஇடத்தில் மகாத்மா காந்தியின் உருவச்சிலை வைக்க ஆயிரம் ரூபா அநுமதிக்க வேண்டுமென்று சென்னை நகரசபையில் தோழர் சிங்காரவேலு செட்டியார் கொணர உத்தேசித்த தீர்மானத்தைத் தலைவர் நிராகரித்து விட்டார்.

o o o

சென்ற பட்சத்தில் ஈரோட்டில் கூடிய கொங்கு மண்டலக் கர்ப்பூரச் செட்டியார்கள் என்ற நாயக்கமார்கள் மகாநாட்டில் அந்த ஜாதியார்கள் சாராயக் குடியை ஒழித்துவிட வேண்டுமென்றும் தெய்வத் தன்மையைப் போக்கி இராட்சதத் தன்மையைக் கொடுக்கும் மாமிசாதி ஆகாரங்கள் அருந்துவதை முற்றிலும் நிறுத்தி விடவேண்டுமென்றும் தீர்மானங்கள் செய்திருக்கிறார்கள்.

o o o

இத்தலி நாட்டிலுள்ள வெரோனு என்னும் ஊரில் இதுவரை பதினெட்டு வயதுள்ள பெண்ணாயிருந்த ரெனட்டா என்பாள் இப்பொழுது திடீரென்று ஆணாகமாறி விட்டாளாம். அவள் பெண்ணாயிருந்த பொழுது எத்தனையோ ஆடவர்கள் அவளைக் காதலித்து இப்பொழுது ஏமாந்து போனார்கள். இதுவரை பாவாடை உடுத்தி யிருந்த ரெனட்டா இப்பொழுது நிசாரணிந்திருக்கிறானாம்.

o o o

சென்ற மாதம் இங்கிலாந்தில் மரணமடைந்த பஞ்சாப் தலைவரான சர் கங்காராமின் எலும்பை அவரது மூத்த புதல்வர் ஆங்கிருந்து சென்ற 15-ந்தேதி லாகூருக்குக் கொணர்ந்தபோது பல வகுப்பாரும் தலைவர்களும் ஸ்டேஷன் சென்று அதனை எதிர் கொண்டு அழைத்தனராம். அது ஊர்வலமாகக் கொண்டு சென்று அவரால் கட்டப்பட்ட அபலை ஆஸ்ரமத்துக்கண்மையிலுள்ள ராவி நதியில் விடப்பட்டதாம்.

o o o

சென்ற மாதத்தில் லண்டனில் பஞ்சாப் பெரியாரான லாலா கங்காராமின் மரண சாசனத்தை லாகூரில் அவர் வீட்டில் அவர் மூன்று குமாரர்கள் நண்பர்கள் முதலியவர்கள் முன் நிற்பதி பகிர்ந்தக்சந்த் திறந்து பார்த்தார். வேறு பல தர்மங்களுக்கும் லாலா கங்காராம் பணம் கொடுத்திருப்பதுடன் கங்காராம் தர்ம நிதிக்கு 12 லட்ச ரூபா ரொக்கமும் இரண்டு லட்ச ரூபாய் மதிப்புள்ள சொத்துக்களும் எழுதி வைத்திருக்கிறார்.

o o o

தென் இந்தியா ரயில்வே கம்பெனியார் 52 பிரயாணிகளுக்கு இட வசதியுள்ளதாகவும், 40 பேர் படுத்துக்கொள்ளக்கூடியதாகவும், சமையலறை, ஸ்நான வசதி, கக்கூஸ் வசதி முதலியவை உள்ளதாகவும் ஒரு 3-வது வகுப்பு வண்டி தயார்த்து வருகிறார்களாம். ஒரு கோஷ்டியாகச் செல்லும் யாத்ரிகர்களுக்கும் விவாகசம்பந்தமாகச் செல்பவர்களுக்கும் இவ்வண்டி தயாரிக்கப் படுகிறதாம். விசேஷக் கட்டணம் எதுவும் கிடையாதாம்.

o o o

வெண்ணந்தூர் சன்மார்க்க சபையார் சென்ற 5-ந்தேதி யன்று சுந்தரர் திருநாளை மிக்க விமரிசையாகக் கொண்டாடினர். அன்று திருத்தகிரி ஈசுரன் கோயிலில் குழுமிய பெருங்கூட்டத்தில் திருவாளர் ஆர். வ. சண்முக முதலியார் அவர்கள் தலைமை வகிக்க, திருவாளர்கள் எஸ். இராமசாமி, வி. குப்புசாமி, எஸ். ஆர். சின்னசாமி இவர்கள் முறையே கல்வி, சைவம், ஆசாரம் என்பவைகளைப் பற்றிப் பேசினர் என ஓர் அன்பர் அறிவிக்கிறார்.

o o o

பஞ்சாயத்து சபை அங்கத்தவர் ஒருவரின் உறவினளான ஒருத்தி கள்ளிக்கோட்டையில் 18 வயதுற்றும் வதுவை யாகாதிருந்தாளாம். அப்பெண் கள்ள நடக்கையால் கருத்தரிக்கப் பெற்றமையால் உலகந் தூற்றுமென அஞ்சிக் கிணற்றில் விழுந்தாளாம். மானங்காக்க விழுந்த அவள் மரணமுறாமல் கிணற்றினின்று எடுக்கப்பட்டாளாம். அவள் சில நாளில் குழந்தை பெற்றாளாம். குழந்தை உடனே இறந்ததாம். சில நாளில் அவளும் இறந்தாளாம்.

o o o

வில்லிவாக்கத்தில் சென்ற டிஸம்பர் மாதம் ராமிஜஸ்வரி, சுப்பம்மா, வேங்கட இருஷ்ணய்யா மூவரையும் பாஷாணம் கொடுத்துக் கொன்றதாக சுப்பராவ் வெங்கடரமணய்யா இருவரையும் குற்றஞ்சாட்டித் தூக்கிலிடுமாறு செங்கல்பட்டு செஷன்ஸ் நீதிபதிசெய்த தீர்ப்பு சென்னைஹைகோர்ட்டின் ஆலோசனைக்கு வந்தது. நீதிபதிகள் கீழ்க்கோர்ட்டு தீர்ப்பை மாற்ற ஒருவித காரணமும் இல்லையென்று சொல்லி, அதை ஊர்ஜிதப்படுத்தி விட்டார்கள்.

o o o

மைசூர் அரசாங்கத்தார் "காணியர்" என்ற பத்திரிகையை வெளியிட அநுமதியாததற்காக அதன் ஆசிரியர் ஸ்ரீமான் டி. இராமச்சந்திர ராவ் மஞ்சள் உடையணிந்து தெருத்தெருவாகச் சத்தியாக்கிரக ஊர்வலம் வந்து ஆங்காங்குப் பெருங் கூட்டம் கூட்டிக் கையெழுத்துப் பிரதியைப் படித்துக் காட்டுகிறாராம். அரசாங்கத்தார் ஊர்வலம் புரிதலாகாதெனத் தடுத்தும் அவர் உத்தரவை மீறி ஊர்வலம் செய்துவருகிறாராம். மைசூர் அரசாங்கத்து உத்தரவுக்குக் கீழ்ப்படியாத செய்கை இதுதான் முதன்மையானதாம்.

o o o

காசி சிறையில் ஜூலை 4-ந் தேதி சூபரிண்டெண்டெண்டும் ஜெயிலரும் சுற்றிவருகையில் 15 நாட்களுக்கு முன்சேர்க்கப்பட்ட ஒரு கைதி தடியை ஓங்கிக்கொண்டு வந்தானாம். அதனைக்கண்ட மற்றவர்கள் கைதியைப் பிடித்துத் தண்டத்தாலடித்தனராம். கைதிக்குத் தலையில் பலத்த காயம் பட்டதாம். சிறை வைத்தியர் கட்டுகட்டி அவன் வயிற்றிலிருந்து ஏதையோ எடுத்தாராம். அதிலிருந்து கைதி பலவீனமடைந்து இறந்தானாம். மரண பரிசோதனை புரிந்த மற்றொரு வயித்தியர் தலைக் காயத்தால் மட்டும் மரணம் நேர்ந்திருக்க முடியாதென்று கூறினாராம்.

o o o

சென்னை மலைச்சாலையிலுள்ள நீல் சிலையை உடைக்கும் முயற்சி மேலும் நடந்து வருகிறது. ஸ்ரீமான்கள் திருமலைஸ்வாமி நாயுடு, ரங்கநாத ராவ், வேணுகோபால் நாயுடு என்னும் மூன்று தொண்டர்கள் அச்சிலையை உடைக்கமுயன்று ரூ. 50 வரை நஷ்டப்படுத்தியதற்காகவும், ஸ்ரீமான் சோமயாஜுலு அவர்களைத் தூண்டிவிட்டதற்காகவும் ஒரு வருஷம் கடுங்காவல் தண்டனையும், 50 ரூபா அபராதமும் விதிக்கப்பட்டனர். இதற்குப் பிறகு மறுபடியும் சிலர் நீல் சிலையை உடைக்க முயற்சித்ததாகக் கைது செய்யப்பட்டிருக்கின்றனர். இதற்கென்று இன்னும் பல தொண்டர்கள் முன் வருவார்களென்று காணப்படுகிறது.

o o o

சிக்கல் பொருள்வைத்த சேரி செங்குந்த மகாஜன சபையின் ஆதரவில் பிரபவ௵ ஆடி௴ 22-ம் தேதி மாலை 5½ மணிக்கு தெண்டபாணி கோயில் கீழ் வீதியில் ஒரு பெருங் கூட்டங் கூட்டப் பெற்றது. சிக்கல் உயர்திரு சோ. ச. கந்தசாமி முதலியார் அவர்கள் தலைமை வகித்து முன்னுரை மொழிந்த பின் நாகை திரு. காளியப்ப தேவரவர்கள், டி. பி. ஆறுமுகம் பிள்ளை அவர்கள், சாமுவேல் பிள்ளை அவர்கள், நா. நாகப்ப முதலியாரவர்கள், பட்டுக்கோட்டை ஸ்ரீமான் அழகிரிசாமி நாயுடு அவர்கள் முதலியோர் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள் எனக் காரியதரிசி அறிவிக்கிறார்.

o o o

பூவிருந்தவல்லி சப் போஸ்டு மாஸ்டர் ஸ்ரீமான் ஆ. இரத்தினவேலு முதலியார் அவர்கள் தமது 55 வது ஆண்டு நிறைவான உடன் 15-8-27 ல் தமது உத்தியோகப் பதவியினின்றும் விலகிக் கொள்வதை முன்னிட்டு இந்நகரவாசிகள் பலர் ஒன்று கூடி அன்னவரைக்கௌரவிக்கும் பொருட்டு ஒரு தேநீர்விருந்து நடத்தினர். அச்சமயம் ஸ்ரீமான்கள் ராவ்சாஹிப் ஆர். ஸ்ரீநிவாசன் எம். எல். சி. ஸ்ரீநிவாசய்யர் எம். ஏ., சப் மாஜிஸ்ட்ரேட், பூவிருந்தவல்லி, மாசிலாமணி முதலியார், சேர்மன், பூவிருந்தவல்லி யூனியன் போர்டு, கண்டோன்மெண்டு உத்தியோகஸ்தர்கள், இன்னும் பல பிரபல வெற்றிலை வியாபாரிகளும் விஜயம் செய்தனர் என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

o o o

பொள்ளாச்சி நகரசபையின் இரண்டாவது வார்டுக்கு 16-8-27-ந்தேதி நடைபெற்ற தேர்தலில் திருவாளர் தா. க. முத்துசாமி செட்டியார் அவர்களுக்கு 48 வோட்டும், திருவாளர் சுப்பையா நாயுடு அவர்களுக்கு 19 ஓட்டும் கிடைத்தன. திருவாளர் தா. க. முத்துசாமி செட்டியார் தேர்ந் தெடுக்கப்பட்டார். இனி மேலாகிலும் இதுவரையில் முனிசிபல் அங்கத்தினர்களால் ஏற்பட்டுவந்த கட்சிப் பிரதி கட்சிகளை ஒரு கட்சியாக்கி ஏகமனதுடன் பொது நன்மைக்குப் பாடுபட்டு வேண்டிய சீர்திருத்தங்களை செய்யுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன் என்று திரு ராம்ஜி எழுதுகிறார்.

o o o

புரசை மு. பாலசுந்தர நாயகர் சென்ற 19-8-27 மரண முற்றாரெனத் தெரிந்து மிக்க வருந்துகிறோம். இவர் யாழ்ப்பாணம் ஸ்ரீலஸ்ரீ நா. கதிரைவேற் பிள்ளை அவர் மாட்டுத் தமிழ்பயின்றவர்; சைவத் திருமுறைகட்காக உழைத்த தமது ஆசிரியருக்குப்பெரிதும் துணைபுரிந்த சைவப்பற்றுடையார். ஸ்ரீல ஸ்ரீசோமசுந்தர நாயகரவர்களால் நிறுவப்பெற்ற வேதாகம மோக்த சைவசித்தாந்த சபைக் காரியதரிசியாகவும் புரசை கங்காதரீஸ்வரர் தேவஸ்தானம் ஸ்ரீ ஆதிவிநாயகர் தேவஸ்தானம் இவைகளின் ரிசீவராகவும் சென்னை வன்னிய குலக்ஷத்திரிய மகாசங்க நிர்வாகியாகவுமிருந்து மன்பதை நீத்த நாயகரின் குடும்பத்தாருக்கு நமது அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம் என ஓர் அன்பர் தெரிவிக்கிறார்.

o o o

மகாத்மாகாந்தி தமிழ்நாட்டுக்கு விடுத்திருக்கும் ஒரு விண்ணப்பத்தில் இறைவன் அருள் கூட்டிவைத்தால் செப்டம்பர் மாதத் தொடக்கத்தில் தமிழ்நாட்டுச் சுற்றுப் பிரயாணத்தை ஆரம்பிக்க உத்தேசமென்றும், உடல் நிலைகாரணமாக முதலில் உத்தேசிக்கப்பட்ட எல்லா இடங்களுக்கும் வர இயலாமலிருக்கிறது குறித்துப்பெரிதும் வருந்துவதாயும், முக்கியமான இடங்களுக்குத் தாம் வரும்போது சுற்றுப்புறங்களிலுள்ளவர்களும் தங்கள் தங்கள் பணமுடிப்புடன் வந்து சேர்வார்களென எதிர்பார்ப்பதாகவும், வரவேற்புக் கமிட்டிகள் படாடோபத்துக்குரிய இனங்களில் சிறிதும் பணச் செலவு செய்யக்கூடாதென்றும், ஒவ்வொரு பைசாவையும் மீத்து ஏழைகளின் தொண்டுக்குக் கொடுக்கும்படியும் கேட்டுக்கொண்டிருக்கிறார்.

o o o

சீனத்தில் காண்டன் தேசிய அரசாங்கத்தின் பிரதம சேனாதிபதியா யிருந்தவரும், புதிய நாங்கிங் அரசாங்கத்தை ஸ்தாபித்துச் சிறிது காலம் அதன் தலைவரா யிருந்தவருமான தளபதி சியாங்-காய்-ஷேக் தமது பதவியை ராஜிநாமா செய்துவிட்டுப்பொது வாழ்வி லிருந்து விலகிக்கொண்டாராம். அவருடைய படைகள் வட சீனப் படைகளால் சமீபத்தில் தோற்கடிக்கப் பட்டதும், ஷோ-மின்-டாங்கில் பிளவுக்குத் தாம் தான் காரணம் என்று சொல்லப்படுவதும், தமது உடலும், மனமும் பலவீனமுற்றிருப்பதுமே தாம் விலகிக் கொள்வதற்குக் காரணங்கள் என்று அவர் விடுத்துள்ள அறிக்கையில் சொல்கிறார். அவரும், அவருடைய குடும்பத்தாரும் சொந்தக் கிராமத்துக்குச் சென்று விட்டார்களாம். இதன் பயனாகச் சீனத்தில் இன்னும் குழப்பம் மருகுந்துவிட்டது. வட சீனப்படைகள் வெற்றியுடன் முன்னேறுகின்றனவாம்.

o o o

ஆடி மாதத்தில் அம்மன்கோயில்களில் கணக்கில்லாமல் ஆடு கோழிகளைப் பலி கொடுக்கும் கொடிய வழக்கத்தை நிறுத்தவேண்டி, பரங்கிமலையைச் சேர்ந்த ஆதம்பாக்கம் பொதுஜனஊழிய சங்கத்தினர் ஆதம்பாக்கம், ஆலந்தூர், பரங்கிமலை, வேளச்சேரி, மடுவங்கரை முதலிய இடங்களில் பிரசாரங்கள் நடத்திவந்ததால் பெரும் பயன் விளைந்தது. ஆடிமாதத்தின் கடைசி ஞாயிறு ஆலந்தூர் வேம்பலி அம்மன்கோயிலில் வருஷக்கொண்டாட்டம் நடந்தபோது, நூற்றுக் கணக்காகஆடுகளும் கோழிகளும் வழக்கமாக வெட்டுப்படுகிற இடத்தில், சில ஆடுகளும் கோழிகளுமே கொண்டுவரப்பட்டன. அன்று மாலை சங்கத்தொண்டர்கள் கூட்டமாக அந்த இடத்திற்குச் சென்று ஜீவகாருண்யத்தின் மேன்மையைக்குறித்துப் பாடல்களைப் பாடியும் உபந்யாசங்களைச் செய்தும் விளக்கிக் காட்டியதின் பயனாக ஆடு கோழிகள் கொண்டுவந்திருந்தவரும் அவைகளை அம்மனுக்கு உயிருடன் சுத்திவிட்டுவிட்டனர். மொத்தத்தில் ஆறு ஆடுகளும் பத்து கோழிகளுமே வெட்டப்பட்டன. சில ஆடுகளையும் கோழிகளையும் சங்கத்தார் விலை கொடுத்து வாங்கினர். எதிர்பாராவண்ணம் இவ்வளவு வெற்றி கிடைத்ததைக்கொண்டு சங்கத்தார் தங்கள் சந்தோஷத்தைத் தெரிவிக்கின்றனர்.



# எதிரொலி

## லண்டன் பிச்சைக்காரர்

"கார்லண்ட்" என்னும் பத்திரிகையில் ஸ்ரீமான் ஏ. எஸ். பஞ்சாபகேசய்யர் ஐ. சி. எஸ். எழுதுவதாவது:—

லண்டன் வீதிகளில் பிச்சையெடுத்தால் சட்டப்படி குற்றமாகும். பிச்சைக்காரர்களைப் போலீஸார் கைது செய்வார்கள். ஆனால் சிலர் சட்டத்துக்குத் தப்பித்துக் கொண்டு பிச்சையெடுக்கச் சில சாமர்த்தியமான முறைகளைக் கையாளுகிறார்கள். இவற்றில் ஒன்று வீட்டு வாசலில் நின்று கர்ணகடூரமான சத்தம் செய்யும் வாத்தியங்களை வாசித்துக்கொண்டிருத்தல். வீட்டுக்காரர்கள் இந்தச் சத்தத்தைக் கேட்கச் சகியாது ஏதேனும் காசுகொடுத்து அனுப்புகிறார்கள். மற்றொரு முறை நெருப்புப் பெட்டி விற்றல். ஒருவன் என்னை ஒரு நெருப்புப் பெட்டி வாங்கச் சொல்லிப் பிராணனை எடுத்துக் கொண்டிருந்தான். சுருட்டுப் பற்றவைப்பதற்கு அது தேவையா யிருக்குமென்று அவன் சொன்னான். நான் சுருட்டுப் பிடிப்பதில்லையாதலின் நெருப்புப் பெட்டி தேவையில்லையென்றேன். அப்போது அவன் மிகவும்சாமர்த்தியமாக "சுருட்டுப் பிடியாததால் ஏராளமான பணம் தங்களுக்கு மிகுதியாகிறது. எனக்கு ஒருபென்னி கொடுப்பது ஒரு கஷ்டமா?" என்றான். அவனுக்கு ஒரு பென்னி கொடுத்து விட்டுச் சென்றேன்.

## மாறுதல் வேண்டாதாரின் தீர்க்க தரிசனம்

டாக்டர் அன்சாரியின் அறிக்கையைப்பற்றிய தலையங்கத்தினிடையே "ஹிந்து" பத்திரிகை எழுதுவதாவது:—

சட்டசபைப் பிரவேசத்தினால் என்னென்ன தீமைகள் வருமென்று ஸ்ரீமான்கள் அன்சாரி, கஸ்தூரிரங்கய்யங்கார், இராஜகோபாலாச்சாரியார் இவர்கள் சட்டமறுப்புக் கமிட்டி அறிக்கையில் மிகுந்த தீர்க்க தரிசனத்துடன் குறிப்பிட்டிருந்தார்களோ அத்தீமைகளெல்லாம் இப்போது வந்தே விட்டன. முட்டுக்கட்டை போடுவதற்காகச் சட்டசபை நுழைவதென்று ஆரம்பித்தால் வரவர நமது கட்டுப்பாடு குலைந்து போகுமென்று அவர்கள் சொன்னார்கள். சென்ற சில வருஷங்களின் சரித்திரம் அவர்களுடைய பயத்தை மெய்ப்படுத்தி விட்டன. நம்மிடையே சஞ்சல சுபாவமும், குதர்க்க புத்தியும், மனதிலொன்றுவைத்து வெளியிலொன்று செய்வதும் அதிகமாகிவிட்டன. கௌஹத்தி தீர்மானத்துக்கு முரண்பாடில்லாமல் மந்திரி சபையையும் காப்பாற்றலாமென்று ஜனங்கள் வாதம் செய்யத் தொடங்குவார்களாயின், அதைவிடக் குயுக்தியை [illegible] வந்த காங்கிரஸ் சட்டசபை அங்கத்தினர், இப்போது தாங்கள் கைக்கொள்ளும் உபாயங்களுக்குக் காங்கிரஸ் கட்டளையை ஆதாரமாகக் காட்டாமல், வாக்காளரின் ஆக்ஞையையும், தங்கள் மாகாணத்தின் விசேஷ நிலையையும் காரணமாகச் சொல்லத் தொடங்கியிருப்பதில் ஆச்சரியமென்ன?

## பண்டைநாளில் ஹிந்துமதந்தழுவிய அன்னியர்

"ஹிந்து மிஷன் புல்லடின்" என்ற பத்திரிகையில் டாக்டர் சுநீதிகுமார் சட்டர்ஜி எழுதுவதாவது:—

பண்டை இந்தியாவின் சிலாசாஸனங்களுள், குவாலியர் சமஸ்தானத்தில் பெஸ்நகர் ஸ்தம்பத்தில் உள்ள சாஸனம் குறிப்பிடத்தக்கதாகும். இது கிறிஸ்துவுக்கு முன் இரண்டாவது அல்லது மூன்றாவது நூற்றாண்டில் வழங்கிய பிராகிருத எழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ளது. ஸ்தம்பத்தின் உச்சியில் விஷ்ணுவின் வாகனமான கருடன் அமைந்திருக்கிறது. "தேவதேவனான வாசுதேவனின் இந்த கருடத்வஜமானது பாகவதன் ஹெலியோடோரஸ்வினால் ஏற்படுத்தப்பட்டது" என்று மேற்படி சாஸனம் கூறுகிறது. இந்த ஹெலியோடோரஸ் ஒரு கிரேக்கன். அண்டியால்கிடாஸ் என்னும் கிரேக்க அரசனால் காசிபுத்ர பகபத்ரன்என்னும் ஹிந்து அரசனிடம் தூதனாக அனுப்பப்பட்டவன். இதிலிருந்து முற்காலத்தில் ஹிந்து மதமானது "மிலேச்சர்" அதாவது அன்னியர்களைத் தன்னுள் சேர்த்துக்கொள்வதன்டென்று திட்டமாக நிரூபணமாகிறது. பண்டை இந்தியச் சரித்திரத்தில் இதற்கு இன்னும் எத்தனையோ சாட்சியங்களும் அகப்பட்டிருக்கின்றன. கிரேக்கர்களைப்போலவே, சகர்களும், பார்த்தியர்களும் ஹிந்து மதத்தைத் தழுவியிருக்கிறார்கள். பெரும்பாலும் அவர்கள் ஹிந்து சமூகத்தில் க்ஷத்திரியர்களாக அங்கீகரிக்கப் பட்டார்கள். ஸாமோதிகன், தமாஸாதன், கனிஷ்கன், மிஹிர குலன் முதலிய அன்னியப் பெயர்கள் இரண்டு மூன்று தலைமுறையில் ஜயதாமன், ருத்திரதாமன், வாஸுதேவன் முதலிய ஹிந்து பெயர்களாக மாறின. இப்போது வைதிக ஹிந்துக்கள் என்று எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்படும் சமூகங்கள் பல அன்னிய நாட்டுச் சாதிகளின் வழித் தோன்றியனவாகும். முற்காலத்தில் ஹிந்துமதம் உயிர்பெற்று விளங்கியபோது அது தன் எல்லையையும் கடந்து பர்மா (சுவர்ண பூமி), ஸயாம் (த்வாராவதி), கம்போடியா (காம்போஜம்), கொச்சின் சைனா (சம்பா), மலாயா (கடஹா), சுமத்ரா (ஸ்ரீ விஜயம்), ஜாவா (ஜவத்வீபம்) முதலிய இடங்களுக்குச் சென்று அங்கிருந்தோரை யெல்லாம் வைதிக ஹிந்துக்களாக ஆக்கிற்று. அந் நாடுகளில் கண்டு பிடிக்கப்பட்டுள்ள சிலாசாஸனங்களினாலும், தற்போது அந்நாடுகளில் வசிக்கும் ஜனங்கள் சிலர் இன்னும் ஹிந்து மதாசாரங்களைக் கடைப்பிடித் தொழுகி வருவதாலும் இது தெள்ளிதின் விளங்குகிறது. ஆனால் கத்தியின் துணையினால் ஹிந்து மதம் பரவிற்று என்பதற்கு மட்டும் எள்ளளவு சாட்சியமுமில்லை.

## வெள்ளத்தை எதிர்த்துச் சத்தியாக்கிரஹம்

மகாத்மா காந்தி சென்றவாரத்து "எங் இந்தியா"வில் எழுதியுள்ள தலையங்கத்தின் ஒருபகுதி வருமாறு:—

வெள்ளத்தின்போது குஜராத் செய்துள்ள காரியங்கள் சுத்த சுயராஜ்யமே யல்லாது வேறில்லை யென்று நான் கருதுகிறேன். இவ் வெள்ளத்தினால் விளைந்துள்ள நாசத்தைப்போல் வேறெப்போதும் விளைந்ததில்லை யென்று சொல்லலாம். இந் நாச வேலைக்கு முன்னால் டையரின் அழிவுச் செயல்கள்கூட அற்பமாகி விடுகின்றன. டையர் ஆயிரத்திருநூறு மனிதரைத்தான் கொல்லவோ, காயப்படுத்தவோ செய்தார். ஆனால் வெள்ளத்தினால் விளைந்த பொருட் சேதங்களும், உயிர்ச்சேதங்களும் யாராலும் கணக்கிட்டுச் சொல்ல முடியாதனவா யிருக்கின்றன. ஆனால் (குஜராத்தியர்) நாம் வெள்ளத்தைத் திட்டவில்லை. அதை எதிர்த்துச் சத்தியாக்கிரஹம் செய்தோம். நம்மை நாமே தூய்மைப்படுத்திக் கொண்டோம். நிர்மாணவேலை செய்தோம். ஹிந்து முஸ்லீம் ஒற்றுமையை நாட்டினோம். தீண்டாமையை யொழித்தோம். தற்சார்புள்ளவர்களானோம். நமது உடமை [illegible] சகோதரிகளின் [illegible] னுக்கு முன்னால் [illegible] லாக அவனைத் திரத்துடன் எதிர்த்து நின்றோம். ஒன்றுமே நேரிடாததுபோல் வேலை செய்யலானோம். நாம் வெள்ளத்தைப் பார்த்து அஞ்சியிருந்தாலும், அதனுடன் பலாத்காரப் போராட்டத்தைத் தொடங்கியிருந்தாலும், நமது கஷ்டங்களை நாம் அதிகப்படுத்திக் கொண்டிருப்பமே யல்லாது வேறில்லை. குஜராத் மாகாணம் தனது பெருமையை நிரூபித்து விட்டதன் பொருட்டு அதற்கு வாழ்த்துக்கூறுகிறேன்.

## யார் அரோகி?

"ஸ்நானதர்மம்" என்னும் பத்திரிகையில் பின்வரும் குறிப்பு காணப்படுகிறது:—

உலகில் பிணியற்றவன் யார்? ஒரு காலத்தில் அசுவினிதேவர்களுக்கு இச்சந்தேகம் வந்தது. "உலகில் அரோகி யார்?" என்று வினவிக்கொண்டே அவர்கள் சுற்றினார்களாம். அவர்கள் கேள்வி கவியரசனை காளிதாஸன் காதிற்பட்டது. அவன் அடியில் வருஞ்செய்யுளால் பிணியற்றவன் யாரென்பதைத் தெரிவிக்கிறான்:—

ஹித மிதபுக் ஸூத்காலே,
க்ருத சங்க்ரமண க்ரமேணவாமஸ்ய:
அவித்ருத மூத்ர புரீஷ:
ஸ்ரீஷு ஜிதாத்மா பதங்கவா:
ஸோ அருக்

பிணியற்றவன் பசித்தபோதே இதமாகவும் மிதமாகவும் உண்பான். வலதுபக்கம் சாய்ந்து படுக்கமாட்டான். மல ஜலங்களைத் தடையன்னியிற் போக்குவான். சிற்றின்ப இச்சையை வெல்லுவான். இத்தகையோனே அரோகியாவன்.

வேதாங்க ஜோதி
சாஸ்திர விசாரம்

எமப்பூர் ரா. சுவாமிநாத தேசிகர்
எழுதுவது

சிவபெருமானருளிய வேதாங்கம் ஆறனுள், நேத்ராங்கமாய் விளங்கும் சோதிட சாஸ்திரமானது, கணித ஸ்கந்தம், ஜாதக ஸ்கந்தம், ஸம்மிதா ஸ்கந்தம் என மூன்று பிரிவுகளுடையதாகும்.

* * *

இறைவன் ஆக்ஞையால், ஆன்மாக்களின் இருவினைக் கேற்ப இன்ப துன்பங்கள் அடையுங் காலம் அயனால் அமைத்துள்ளதாகும். அவ்விதியை விளக்கிக் கூறும் நூல் சோதிடமாகும். அந்நூலை நன்குணர்ந்து உரைக்க வல்லவனே சோதிடனாவான்.

* * *

சிவபெருமான் ஆன்மாக்களின் மீதுள்ள கருணையில் இக்கணித சாஸ்திரத்தை, உமாதேவிக்கும் சாபானுக்கிரகம் பெற்றுள்ள மகான்களான பதினெண் மகரிஷிகட்கும் வழியே அருளிச்செய்தனர். பின், அப்பதினெண்மரும் நான்கு லக்ஷத்தைம்பதினாயிரம் கிரந்தங்கள் வடமொழியில் இயற்றியுள்ளார்கள். தென்மொழியிலும் பல மகான்கள் அக்கருத்தைப் பின்பற்றி அரிய பெரிய அநேக நூல்களை அருளிச்செய்தனர்.

* * *

இந்நூல்களினா லுண்டாகும் பயன்களை நவலுமிடத்து, வர்ணாசிரம தர்மங்களுக்கேற்ப, இல்லற தருமங்களை நல்லறமாகக் கொண்டு அதன்படி யொழுகும் நம்மவர்கட்கு வாரம், நக்ஷத்திரம், திதி, யோகம், கரணம் முதலானவைகளினால் சுப முகூர்த்தங்களையும், புண்ய காலங்களையும் விசாரித்தறிந்து, இகபர சாதகத்திற்குரிய தவம், விரதம், தானம், தர்ப்பணம், சிரார்த்தம் முதலான பல ஸத்கருமங்களைச் செய்து, உய்யும் பொருட்டு அவசியம் வேண்டுமென்பது யாவரும் அறிந்த விஷயமாகும். அறவறத்தோர்க்கும் இஃது எவ்வகையிலும் துணையாக உள்ளது.

* * *

பொதுவாக இந்நூலின் வழி உலகத்திலுள்ள எவ்வகை மதஸ்தர்களும், எவ்வகுப்பினர்களும், எத்தேசத்தவர்களும் எவ்வகையிலாவது நின்று அனுஷ்டித்தல் நன்கு மதிக்கப்பட்டு வருகிறதென்பதை ஆராயப்புகின் ஆற்றலுடைய பெரியோர்கள் அறியாமற்போகார்.

* * *

இவ்வுலகில் இந்த சோதிட சாஸ்திரமாகிற கணித நூல் இல்லையேல் கதிரவனில்லா தினம்போலும், கண்ணொளியில்லா நயனம் போலும், உலகும் காடாந்தகாரமாய் வேதாகம கர்மானுஷ்டானங்கள் ஒன்றும் நடவாமற் போய்விடுமன்றோ! இது பற்றி "எண்ணென்ப ஏனையெழுத் தென்ப, இவ்விரண்டுங் கண்ணென்ப வாழு முயிர்க்கு" என்றருளினார் நாயனார். "எண்ணு மெழுத்துங் கண்ணெனத் தகும்" "எண்ணெழுத்திகழேல்" என்றருளினர் ஔவையார்.

* * *

இஃதிவ்வாறிருக்க, சிலர் சோதிடம் இல்லாமல் என்ன காரியம் கெட்டுப் போகிறது? எல்லாம் பிரமன் எழுதியவாறே நடந்தே தீரும் என்றும், எல்லாம் விதிப்படித்தான் நடக்கும், உள்ளபடியே பிராரத்துவத்தை அனுபவித்தே தீர்க்க வேண்டும், சோதிடம் பார்த்து, அதனால் இனி ஆக்குவதுமில்லை, அழிப்பதுமில்லை, இந்நூல் எற்றுக்கு? ஜீவன நிமித்தமாகு மென்றும் மனம் போனவாறே வாய்ப்பறையாகவும் நாத்தடிப்பாகவும் நாத்திகம் பேசிவிடுகிறார்கள். இதை ஆராயப்புகின், இறைவன் அருள் பெற்ற சாபானுக்கிரக முள்ள பெரியோர்கள், சோதிட சாஸ்திரத்தை, சாந்தி, பரிகாரம், தவம் என்னும் அஸ்திவாரத்தின் மேல் ஏற்படுத்தியுள்ளார்கள்.

* * *

ஒருஜாதகத்தை இந்நூலின்படியே கன்காராயப்புகின், இன்னின்ன புண்ணியஞ்செய்தவனென்றும், இன்னின்ன பாபங்களைச் செய்தவனென்றும், அதன் பயனாக இந்த ஜன்மத்தில் சுகதுக்கங்களை அடைய நேர்ந்திருக்கிறதென்றும், அறியக்கூடும். மறுமையில் அடையும் மார்க்கத்தினையும் சோதிடநூலாலுணரலாம். இன்னல் பலவருவதைத் தெரிந்து, அது நீங்குவதற்காக ஷை சாஸ்திரத்தில் விதித்துள்ள சாந்தி தவம் விரதாதிகளைச்செய்து நீஇன்புற்றிருக்க ஸர்வ ஜீவதயாபரனாகிய கடவுள் ஆன்மாக்கள் அஞ்ஞானத்தால் பாபங்களைச்செய்து, அதனால் அடையும் துன்பங்களை அறிந்து ஆற்றொணாது காருண்யத்தால் சோதிடசாஸ்திரமாகிற ஞானதீபத்தைக் கொடுத்தருளினர். ஜன்மாந்தர ஊழ்வினை முதலானவைகளைத் தெரிந்து அதற்கென விதித்துள்ள சாந்தி முதலானவைகளைச் செய்து அத்தீவினையினின்றும் விடுபடவும், இனி அத்தீவினைகளைச் செய்யாதிருக்கவும், சோதிட சாஸ்திரமே எற்ற சாதகமாம் என்பதை ஆராயும் புண்ணியவான்களான பரிபாகமுள்ள பெரியோர்கட்கு இவ்வுண்மை விளங்காமற் போகாது.

* * *

ஆகவே சோதிடநூலின் உதவியால் நமது ஊழ் என்னும் பகைவனை அறிந்து, அப்பகைவனால் உண்டாம் துன்பங்களைச் சாந்தி தவம் விரதாதிகளால் வென்று விலக்கிக் கொள்ளலாமென்பதே இந்நூலின் முக்கிய கருத்தாகும். இவ்விதிகளை விட்டு எல்லாம் விதிப்படித்தான் நடக்குமென்று வாய்ப்பறை இட்டு அவ்வூழாகிய பகைவனுக்கு அஞ்சாது இடங்கொடுத்துக் கொண்டே போகுமவர்களை பிராரத்துவம் சூழ்ந்து பல துன்பம் தருமென்பதில் சிறிதும் ஐயமின்று.

* * *

எல்லாம் விதிப்படித்தான் ஆகுமென்றால் கடவுள் நமக்கு சாஸ்திரமாகிய சட்டத்தையும் நல்லறிவையும் அருள்வானேன்? என்கிற ஒரு வினா நிகழா நிற்கும். ஆகையால் ஊழின் வலிமையைச் சோதிட சாஸ்திர வழியாலுணர்ந்து அவ்வூழை விலக்கியுய்யும் பொருட்டாகச் சொல்லியுள்ள சாந்தி முதலான ஸத் கருமங்களை—மதியினால் எதுவரினும் விடாமுயற்சியினால் அருளை நம்பி—செய்வோமானால் விதியையுங் கூட விலக்கலாம் என்பதே இச்சாஸ்திரத்தின் துணிபாகும். இக்கருத்து பற்றியன்றோ?

* * *

"தெய்வத்தானாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலிதரும்"

"ஊழை... முப்பக்கக் காண்பருலை வின்றித்
தாழா துஞற்றுபவர்"

என்று நாயனாரும்,

"சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க்கு
அபாய மொருநாளு மில்லை—உபாய
மிதுவே மதியாகு மல்லாத வெல்லாம்
விதியே மதியாய் விடும்"

என்று ஔவையாரும்,

"பரமனரு ளேசன்பதம்
பணிவார்க் கென்றும்
சருமஞ் சிதையுமெனக்
கண்டோம்—அருமந்த
கூட்டுத் தலைபோய்க்
கொடியதக்கன் வேள்வியிலே
ஆட்டுத்தலை யாகையால்"

என்று குக நமசிவாய சுவாமிகளும் கூறியருளினர். "ஊழ்" ஜடம். ஏனையஜடபதார்த்தம் போலல்லாது, இறைவன் ஆக்ஞையால் ஆன்மாக்கட்குப் பந்தித்து சுகதுக்கங்களை ஊட்டுவிக்கும்:, "அவையே தானேயாயிருவினையில் போக்குவரவு புரியவாணையில்நீக்கமின்றி நிற்குமன்றே" என்பது திராவிட சிவஞான போதம். வடமொழியில் "அக்யஸ் ஸங்யாப் ... மாநுஸாத: க... மாக்ஞயா ஸம... ருளிய ஞான... வினையை அறி... டும் கட... திரங்களை... வருத்தி பு... பூண்டொ... அரு... சா... ஆ... அ...

இத்தகைய பெருமைவாய்ந்த வாரிதியொத்த கணித சாஸ்திரத்தை அறியும் ஆற்றலுடையோர் தெய்வ பக்தியுடைய உத்தமன், சத்குணன், பொறுமை நல் அறிவு நீதி, ஈதல் பலகலைகள் அறிவோன், பெரியோரைப் போற்றுபவன், இன்சொல் பகர்வோன் முதலான இலக்கணமமைந்தோனே இந்நூல் சொல்வதற்கு உரியன் என்று ஆசிரியர் நடராஜனார் தாம் அருளிய சாதகாலங்காரத்தில் கூறியுள்ளார்.

* * *

சோதிடசாஸ்திர நுட்பங்களைக் கண்டு தெளிந்து பிறருக்குப் பலன்கள்சொல்வதென்றால் அஃதெளிதன்று. சோதிடம் சொல்பவர்கள் முற்கூறிய இலக்கணமுள்ளோரும், இலக்கண நூல்கள் கற்றோரும், புத்திவிசால முள்ளோரும், ஞாபகசக்தியுள்ளோருமாக இருத்தல் வேண்டும். உலக இலௌகிக விஷயங்களில் புத்தியைப் புகவிடாது, பக்திபூண்டு பஞ்சேந்திரியங்களை பரமாத்மாவுக்கு அர்ப்பணஞ்செய்து சோதிட வாரிதியில், கணிதமாகிற தெப்பத்தை விட்டு அறிவாகிற நீண்ட கோல்கொண்டு மருகுவாகச் செலுத்தல்வேண்டும். இல்லையேல், அச்சமுத்திரத்தில் வீழ்ந்து கரைகாணாது கலங்கித் தத்தளிக்கச் செய்விக்குமன்றோ?

* * *

உலகத்தில் நால்வகைத் தோற்றம், எழுவகைப் பிறப்பு எண்பத்து நான்கு நூறாயிர யோனி பேதங்களுள. ஆதலின் இவற்றிற்கெல்லாம் ராசிகள் நவக்கிரகங்கள், உபக்கிரகங்கள், இவைகளைக் கொண்டுதான் இச்சாதகம், இவ்வித பலன்களுண்டாயது என்று சொல்லல்வேண்டும்.

* * *

இஃது எவ்வளவு கஷ்டமென்பதை நுண்ணறிவாளர்கள் அறியாமற் போகார். மேலும் ஒரே வயிற்றில் ஒரு லக்கினத்தில் பிறந்த இரட்டைப் பிள்ளைகட்குக் கிரகங்கள் யாவும் ஒன்றாய்க் காணப்படினும், ஒவ்வொன்றுக்கும், யோகம் ஆயுள் முதலான பலன்கள் பேதிக்குமென்பதைக் கண்கூடாய்க் காணலாம். மேலும் ஒரே லக்கினத்தில், மனிதர், விலங்கு, பறவைகள், ஊர்வன, நீர்வாழ்வன முதலிய அநேக ஜன்மங்கள் உண்டாகும். சோதிடகணிதத்தால் இந்நுட்பங்களைப் பிரித்தறிய எவ்வளவு சிரமமாகும்?

* * *

சில ஜாதகங்களில் நீசமாய், வக்ரமாய், பகைபெற்று அஸ்தமனமடைந்து கிரகங்கள்காணப்படும். அது மேலான ராஜயோகமாகவிருக்கும். சில ஜாதகங்களில் உச்சலுப் கேந்திர கோணங்களில் கிரகங்கள் பெலத்திருக்கும். அது மகா கஷ்ட தசையையும் அனுபவிக்க நேரும். இந்த நுட்பங்களைச் சோதித்தறிவது எவ்வளவு கஷ்டமாம் என்பது அறிவாளிகள் உணராமற் போகார். ஜோதிட சாஸ்திரத்தின் தன்மை இப்படிக்கிருக்க, இக்காலத்தில் சோதிடர்கள் நாழிகை, இலக்கினம், கிரகங்களை ஸ்புடம் செய்யாமல் ஸ்தூலமாய்ப் போட்டுக்கொண்டும், 9 கிரகங்களை மட்டும் எந்தா கிடைத்த பஞ்சாங்கத்தைப் பார்த்து தசாபுத்திகளை ஸ்தூலமாய் மிக விரைவில் தெரிந்துகொண்டு, பலன்கள் சொல்லுகிறார்கள்.

* * *

சொன்னவை சில தெய்வாதீனமாய்ப் பலித்துக் கொண்டால் ஜோதிடர் கெட்டிக்காரர் என்றும், பலியாவிடில் சோதிடமே சுத்தப் பொய்யென்றும், பலர் நிந்தித்துப் பரிகசிக்கிறார்கள். இஃதென்ன வெட்கக்கேடானகாரியமென்று சோதிடரும் அவமான மடைகிறார்கள்.

* * *

உமாமகேசுவர ஸம்வாதமாகிற ஸந்தான தீபிகையிலும், காலாமிருதம், மங்களேசுவரியம், முதலியவற்றிலும் தெய்வக்ஞனான [damaged] அவமதிக்கலாகா தென்றும், ... ல் எல்லாச் சுபங்களும் ... லாதி தக்ஷிணையுடன், ... க் கேட்கவேண்டு ... ணங்கள் இன்ன ... ங்கால மின்ன ... சோதிடம் சொல் ... றியுள்ளவற்றை ... ல் சோதிடர் ... லவாறாய் ... ம் சாரங்

களும் மிகப் பேதமாய்க் காணப்படுவதால் ஏதோ நேர்ந்தபஞ்சாங்கத்தைக் கொண்டு சாதகம் எழுதுகிறார்கள். நாழிகைஇலக்கினங்களை ஸ்புடம் செய்யாமலும், உபக்கிரகங்களிருப்பதாக உணராது உபேக்ஷை செய்து அதில் முக்கியமாய்ப் பார்க்கவேண்டிய குளிகசாரத்தையுங் கூட குறித்துக் கொள்ளாது குறிப்பென்று பார்க்கிறார்கள். இம்மட்டோ? ஜாதகப்பலன்களை அறிய பத்தொன்பது ஸ்புடங்களும், நட்பு, ஆட்சி உச்சம, பகை, நீசம், வக்ரம், அஸ்தமனம், பாதசாரம், பாகை, கலையாதிகளும் இலக்கின சுபாசுபர்கள், பலம், துர்ப்பலம், மகாதிசை, காலச்சக்கிர திசை, அஷ்டவர்க்கம், ஸ்புடம், இவற்றைடம் சரிவரப் பிரயாசையுடன் கணித்துப்பார்த்துப் பலன் சொல்லாது ஸ்தூலமாய் சொல்வதால் பலன்கள் தவறிப்போகின்றன.

* * *

கேட்க வருவோர்களில் பெரும்பாலார் மேற்கண்ட கணிதசிரமத்தைக் கருதாது, வெகு அவசர வேலைகளை வைத்துக் கொண்டு கொஞ்சம் பார்த்துச் சொல்லுங்கள் என்று, சிலர் பல தப்பிதமான ஜாதகங்களை ஒருங்கே சேர்த்தெடுத்துக்கொண்டு பல கேள்விகள் கேட்க, கூட நாலைந்து பேர்களைடம் கூட்டிக்கொண்டு வந்து, பரீக்ஷை செய்வது போலும், தெய்வ ஆவேசம் வந்தவர்களிடம் கேட்பது போலும் வரம்பு கடந்து கேட்டு விடுகிறார்கள். இவர்களிடம் இந்நூலின் கூறிய கஷ்டங்களைச்சொல்லில் பயனில. அவர்கள் கேட்பதுபோலவே விரைவில் பலன்களைப் பாட்டுப்பாடி சொல்லா விட்டால் இவர் அவ்வளவு கெட்டிக்காரரல்லவென்றும், என்ன ஐயா! ஜாதகத்தைப் பார்த்தவுடன் ஆடள், களத்திரம், புத்திராதிகள், இன்னின்ன வயதுகளில் மாதுர், பிதுர், கர்மம் நடந்திருக்கிறது, அல்லது இனி இவ்விதம் நடக்குமென்றும் சொல்லாமல் சந்தேகப்பட்டுத் திகைத்துக் கொண்டு ஏதோசொல்லி, புள்ளி போட்டுக் கொண்டு வீணுகப் பொழுதைப் போக்குகிறீர்களே? என்று வாய் கூசாது சொல்லும் நூலின் நுட்பமறியாதோர்க்கு, நால் வேத பாரங்கமாயினும், ஆகிய நம்மை வனே பதில் சொல்லவேண்டுவதாகும். இன்னது தான் கேட்கலாமென்கிற சாஸ்திர மரியாதை இவர்களறியார்.

* * *

இக்கட்டைவைகளைக் கணித்தறிந்து சொல்வது கஷ்டமென்பதை உணராது, மூடர் ... மாய்க் கேட்கும் பரிபாகிகட்கு உள்ளபடி கணித்துரைக்கினும் அஃது பலியாது. சொல்கிறவர்கட்கும் பாபம் ... என்பது ...

"திருப ... அருளைப் பெற்றிடாதவர்க்கும்
... தெய்வத்தைப் பணிந்திடாதவர்க்கும்
கருமிகள் போலும் ... மா
... ... சாஸ்திரம் ...
... மையா ... ரைத்தல் கேட்பவர்க்
வஞ்சகர் லோபியர் தமக்கும் [கும்
சுருதியை நம்பாதர்க்க வாதியர்க்கும்
சோதிட முரைப்பர்த தோஷம்"

என்றபடி தர்க்க வாதத்துடன் தெய்வத்தைக் கேட்பதுபோல் மனம்போனபடி கேட்டுவிட்டு, நன்றாய் சொல்லவில்லை என்று குறைகூறி அவமானமடையச் செய்யப்புகும் புண்ணிய புருஷர்கட்கு,சிரமப்பட்டு சொல்ல வேண்டியதில்லை யென்றேற்படுகிறது. ஆசிரியர் தில்லைநாயக சோதிடர் சாதக சிந்தாமணியில், "கம்புவனத் தாமரையான் செங்கண்மால் சோதிடத்தைக் கரைகாணார்கள்" என்று வரைந்த செய்யுளை யோசிக்க, "சோதிடம் ஸாகரமாம்" இதன் கரைகாண்பது தேவர்கட்கும் துர்லபமாம். என்றால், வரம்பின்றி வாய்கூசாது, கேட்பதும் சோதிடர் அவர்கள் அறியாது கேட்பதற்கெல்லாம், அவர்களிஷ்டம்போல்கண்டபடிக்கெல்லாம் சொல்வதுங் கூடாது. சாஸ்திரமுறை அறியாது சோதிடம் சொல்லில், கொலைபுரி தோடமாமென நூல்கள் நுவலு மாதலானும் நூல்பல கற்று தெய்வபக்தியுடன் முறைப்படி ஆய்ந்தறிந்த நுண்ணறிவாளர்களான பெரியோர்கள், இவ்வேதாங்கமாம் சோதிடம் சொல்லவல்லுனராவர். அப்பெரியார் சொல்லும் பலன்கள் சரிவர சித்திக்குமென்பதே இந்நூலின் முடிபாகலான், இதனை விரிவஞ்சி இம்மட்டும் முடித்துக்கொள்கிறேன்.

[illegible] by T, V. Kalyanasundaran (Editor) at the Sadhu Press, 12-Ganapathi Mudali St., Royapettah, Madras.

